

குலமுதலடும் தீவினைக்கொடுவன்குழியினில்
வீழ்க்கும் ஐவரை
வலமுதல் கெடுக்கும் வலமே தந்தருள் கண்டாய்
நில முதலினியெவ்வுலகுக்கும் நிற்பன செல்வனவென பொருள்
பலமுதல் படைத்தாய் என் கண்ணா! என் பரஞ்சுடரே !

பூமி முதலாக மற்றும் ஏல்லா உலகங்கங்களையும், நின்றிடும் நகர்ந்திடும் பொருள்கள் எல்லாவற்றையும் முன்னம் படைத்தவனே, என் கண்ணனே, ஏன் பரஞ்சோதி வடிவுடையோனே! குலத்தை வேரோடு அழித்திடும் வல்லவமை கொண்ட சிற்றின்பங்களிலே தள்ளிடும் ஐம்பொறிகளை பெரும் பலத்தோடு அழித்திடும்படியான உறுதியை எனக்கு அருள்புரிவாயாக.

-திருவாய்மொழி - 7-1-9

# ஸப்தகிரி

## ஆகஸ்ட் - 1994

தனிப்பிரதி ரூ. 2 — மலர் 25

வருடச்சந்தா ரூ. 24 — இதழ் 3

சிறப்பாசிரியர் :
திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

பொறுப்பாசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை

| உள்ளுறை | பக்கம் |
|---|---|
| அமுதத் துளிகள் | ... 4 |
| அறத்தின் வடிவே கண்ணன் | ... 8 |
| பகவத் கீதை | ... 10 |
| இசை | ... 13 |
| சீராரும் வில்லிபுத்தூர் சுடர்க்கொடி | ... 15 |
| சித்திரக் கவியில் பக்திப்பாடல்கள் | ... 20 |
| ரெங்கதீர்த்தப் பெருமாள் கோயில் | ... 24 |
| முமுட்சுப்படி | ... 26 |
| தசாவதார அடைவு | ... 31 |
| பாமரனும் கீர்த்தனையும் | ... 34 |
| வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும் | ... 37 |
| மாறன் கண்ட முத்துச்சாமி முதலியார் | ... 42 |

## அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முகப்பட்டை | : ஸ்ரீராதாகிருஷ்ணர்<br>சித்திரம் : கே. ஜெகதீஷ் |
| முதல் உள்ளட்டை | : பவித்ரோத்ஸவம்-திருமலை. |
| 2-வது உள்ளட்டை | : ஸ்ரீவில்லிபுத்தூர் திருக்கோயில். |
| பின்னட்டை | : குழலூதும் கண்ணன்<br>புகைப்படம் : கே. சீதாராம் |
| நடுப்பக்கத்தில் | : ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில், ஸ்ரீநிவாசமங்காபுரம். |

# உங்களுடன்...

பயிர் செய்வதற்குமுன்னர், நிலமானது உழப்படுகிறது. உழுதல்பணி மேற்கொள்ளப் படும்போது நிலத்தின் மேல்மட்டம் பலவாருகச் சிதைக்கப்படுகிறது. இதுபோது மண்ணில் உள்ள புழு பூச்சிகள் பல்வேறு நிலைகளில் நசுக்கப்படுகின்றன. ஆம், பல உயிர்கள் அழிக்கப்படுகின்றன. ஆறு மாத காலத்திற்குப்பின்பு, சிதைக்கப்பட்ட அந்நிலத்தில்தான் பல உயிர்கள் வாழ்தற்குரிய பயிர்கள் அறுவடை செய்யப்படுகின்றன. அன்று பல உயிர்களை அழித்ததற்காக உழவன் தூற்றப்படவில்லை. மாருக அவ்அழித்தவன் ஆக்கத் திற்குக் வழிசெய்ததற்காகப் போற்றப்படுகின்ருன். இது ஒரு உழவனின் கதை. உலகத்தை உழுதிடும் அந்த இறைவனின் கதையும் இதுதான். ஆம், பரமன் எடுத்திட்ட அவதாரங்கள் நமக்குக் கூறும் செய்தியும் இதுதான்.

உயிர்கள் வாழவேண்டுமென்ருல் உலகில் அறம் - தர்மம் வாழ்ந்திட வேண்டும். யுகங்கள் மாறலாம். அதனால் அந்தந்த யுகங்களின் காலத்திற்கும், சூழ்நிலைக்கும் ஏற்ப மனித நெறிகள், வாழ்க்கைமுறைகள், நடைபெறும் நிகழ்ச்சிகள் மாறுபடலாம். ஆனால் எல்லா யுகங்களுக்கும் தேவையான, அடிப்படையான சத்தியங்கள் - தர்மங்கள் மாறமாட்டா. மாறினால் என்றே மனித இனம் மறைந்துவிட்டிருக்கும். இதுதான் சனாதன தர்மத்தின் அடிப்படை நம்பிக்கையாகும். பெருமைமிகு இத்தர்மத்தின் மீது எழுப்பப்பட்டிருக்கும் இந்து சமயத்தின் சிறப்பினையும் ஆற்றலையும் எடுத்துக்காட்டவே அப்பரம்பொருள் பல அவதாரங்கள் இம்மண்ணில் நிகழ்த்தினான்.

மேகம் கருத்தால்தான் மழைபொழியும். வானம் கருத்தால்தான் நிலவுக்குப் பெருமை. கருத்த குயிலுக்குத்தான் இனிமை சொந்தமானது. ஒற்றுமைக்குக் கருத்தக் காக்கைதான் உதாரணமானது. கருப்பின் அருமை தெரிந்துதான் அந்தக்கிருஷ்ணனும் கார்மேனி கொண் டான் போலும். அதனால்தான் கும்மிருட்டில், சிறையில் தன் அவதாரத்தை அந்தத் துவாபரயுகத்து நாயகன் மேற்கொண்டான் போலும்.

தீயோன் ஒருவனை அழித்திடவே இம்மண்ணில் அப்பரமனின் அவதாரங்கள் விளங் கியபோது , கிருஷ்ணவதாரத்தில் மட்டும் அவ்இறைவன் பலரை அழித்திட்டான். அதுவும் தவழும் வயதிலேயே அந்த அழித்திடும் பணியை மேற்கொண்டான். இராமாவதாரத்தின் முன்பு வரை, இறைவனின் அவதாரம் அஞ்சும்படியாகவும், வியக்கும்படியாகவும் விளங்கிட, திரேதாயுகத்தில் அவ்வவதாரம் மரியாதைக்குரியதாகத் திகழ்ந்திட, துவாபரயுகத்தில் ஓர் இலட்சிய அவதாரமாகப் பொலிந்தது. இராமன் ஓர் இறை அவதாரமாகத் திகழ்ந்திட் டாலும், எங்கும் தன் இறையியல்பைச் சிறிதும் காட்டாமல், ஒரு சாதாரண மனித நிலையிலேயே அவன் வாழ்வைப் பார்க்க முடிந்தது. ஆனால் கண்ணன் பிறந்தது முதல் இறையியல்புகளைக் கொண்டே வளர்ந்தான். அதன் மூலம் இறை உண்மையையும் உணர்த்தினான். கிருஷ்ணவதாரத்தின் போது உண்மை, அறம் காக்கப்பட்டது. பகவத்கீதை எனும் ஓர் ஒப்பற்ற வாழ்க்கை நூல் கிட்டியது. எல்லாவற்றிற்கும் மேலாக இந்து சமய பக்தி இயக்கம் இம்மண்ணில் என்றென்றும் இயங்கிட அவ்வவதாரம் வழிவகுத்தது. கண்ணன் கீதையைப் போதித்ததன் மூலம் ஒரு ஞானாசிரியனாகவும், தன் வாழ்வின் மூலம் ஓர் உலகாசிரியனாகவும் விளங்கினான். கீதைக்கு ஒரு விளக்கமாக விளங்கி, மனிதனுக்கும் இறைவனுக்கும் இடையே நிலவவேண்டிய உறவினையும் சுட்டிக்காட்டினான். பகவத்கீதை போதனைகள் யாவும் சமயங்கள் கடந்த, மானிடரை மேன்மையுற வழிகாட்டிடும் வாழ்க்கைத்துணையாகும். கீதையானது ஒரு சமயநூல் மட்டுமல்ல; சடங்குகளின் இருப்பிட மும் அல்ல. மனிதன் நாளும் எதிர்கொள்ளும் சங்கடங்களைத் தீர்த்திடும் — குழப்பங்களை விலக்கிடும் — ஏமாற்றங்களை எதிர்கொள்ளச் செய்திடும் வாழ்வின் வரமாகும். கடலின்

(48-ஆம் பக்கம் பார்க்க)

# அமுதத் துளிகள்

திரு. C. பன்னீர் செல்வம் - சென்னை.

உயர்வற உயர்நலம் உடையவனால் மயர்வற மதிநலம் அறியாக் காலத்தே அருளப் பெற்ற, நம்மாழ்வார் அருளிய பிரபந்தங்கள் நான்காகும். இந் நான்கு பிரபந்தங்களும் நான்கு வேதங்களுக்கு நிகராகப் போற்றப்பெறும் சிறப்புடையதாகும். நம்மாழ்வாரை வேதம் தமிழ் செய்த மாறன் என்றும் அழைப்பர். இதனை மதுர கவிகள் கண்ணிநுண்சிறுத்தாம்பில்,

மிக்க வேதியர் வேதத்தின்
உட்பொருள்
நிற்கப் பாடி என்னெஞ்சுள்
நிறுத்தினான்

என்று கூறுகிறார்.

"என் நாவில் இன்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்" என்று இறைவனை நினைந்து

"ஆடி ஆடி அகம் கரைந்து இசை
பாடிப்பாடிக் கண்ணீர் மல்கி எங்கும்
நாடி நாடி நரசிங்கா"

என்று பாடுதலையே பெரும் பேறுகக் கொண்டு வாழ்ந்தார்.

"இந்நின்ற நீர்மை யினியாமுறாமை
உயிரளிப்பான்
எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்த
யிமையோர் தலைவா
மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன்
செய்யும் விண்ணப்பமே"

என்று இறைவனை நோக்கி விண்ணப்பிக்கும் ஆழ்வாருக்குப் பாலாழியில் அவன் கிடக்கும் பண்பைக் கேட்கின்ற பொழுது காலாமுகிறது, நெஞ்சு அழிகிறது. கண்கள் சுழன்று நீலாழிச் சோதியாய், ஆதியாய் நிற்கும் பகவானை தன்பால் தொல்வினைகளைக் கடிய வேண்டுகிறார்.

நின்றவாறும், இருந்தவாறும், கிடந்தவாறும் நினைப்பரியனாய், முதல்வனாய், கரிய மேக உருவினனாய் எங்கும் நீக்கமற நின்றிருக்கும் ஸ்ரீமன் நாராயணனின் சாயுஜ்ய பதவியை அடைவதற்கு பகவதாராதனை முக்கியமானது.

எனவே பகவானை திருத்தலங்களில் வீற்றிருக்கின்ற நிலையினையும், பாற்கடலில் பாம்பணை மேல் பள்ளி கொண்டருளும் காட்சியினையும், அர்ச்சா ரூபமாய், ஆண்டவர்தம் சொரூப ரூப குண விபூதிகளில் ஆழ்கிறார்.

பாலாழியில் அவன் கிடக்கும் பாங்கை "செக்கர்மா முகிலுடுத்து" எனத்தொடங்கும் திருவாசிரியத்தின் முதற் பாசுரத்தில் இறைவன் செஞ்சுடர் தரும் சூரியனையும், தண்ணொளி தரும் சந்திரனையும் அணிந்து பல நட்சத்திரங்களை அணிகலன்களாய் சூடிக்கொண்டு, பவளச் செவ்வாய் கொண்டு மரகதக் குன்று, இந்திரன், சிவன் உள்ளிட்ட தேவர் குழாங்களெல்லாம் கைத்தொழப் பாற்கடலில் பள்ளி கொள்ளும் அவனழகில் ஆழ்ந்து லயிக்கிறார். காதல் கூடுகிறது.

சீரார் திருக்குடந்தையில் ஏராற் கோலம் கொண்டிருக்கும் ஆரா அமுதன்பால் நெஞ்சு நீராய் அலைநது, கரைநது உருகுகின்றது. அதனால் அவா இன்னும் அதிகரிக்கிறது.

செவ்வாயும் வெண்பல்லும் சுடர்க்குழை தம்மோடு சிறுமுறுவல் காட்டி உள்ளத்தை கொள்ளை கொண்ட அவ்வாயையன்றி வேறு ஏதும் அறிந்திலர்.

தன் இதய அரங்கத்துள் குடிகொண்ட திருவரங்கப்பெருமானின் வடிவழகை

"...............என் அரங்கத்து இன்னமுதர்
குழல் அழகர் வாயழகர்
கண் அழகர் கொப்பூழில்
எழுக மலப் பூ அழகர்"

என்று நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் களிப்படைவது போல், ஆழ்வார் அதனினும் ஒரு படி மேலே சென்று,

கட்டுரைக்கில் தாமரைநின் பாதம்
கை ஒவ்வா
சுட்டுரைத்த நன்பொன் உன்
திருமேனி ஒளி ஒவ்வாது
ஒட்டுரைத்து இவ்வுலகு உன்னைப்
புகழ்வெல்லாம் பெரும்பாலும்
பட்டுரையாய் புற்கு என்று
காட்டுமால் பரஞ்சோதி

என இறைவன் திருவடி தாமரை மேனி பசும்பொன் என்றெல்லாம் இவ்வுலகம் ஒட்டு உரைக்கின்ற புகழ் வெறும் பகட்டுரையாய்ப் போகும் என்று குறிப்பிடுகிறார்.

இறைவனின் வடிவழகில் ஈடுபடும் ஆழ்வார் காதல் மிகுவதனால் கண்களால் காண்கின்ற

பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலர் என்றென்று காண்தொறும்

கண்ணன் உருவாய் காட்சியளிக்கின்றன.

ஆதிலின் இறைவனை.



'பாரும் நீ வானும் நீ காலும்
நீ தீயும் நீ
நீரும் நீயாய் நின்றநீ'

எனப் பாடிப் பரவுகிறுர்.

அர்ச்சையில் திவ்ய தேசங்க ளில் காட்சியளிக்கும் தலமூர்த்தி யைக் கண்டு ஆராதிக்கும் ஆழ் வாருக்கு

செடியாய வல்வினைகள் தீர்க்குந்
திருமாலே
நெடியோனே வேங்கடவா
நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும்
கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன்
பவளவாய்க் காண்பேனே

என்று குலசேகராழ்வார் விழை வது போல் அவருக்குத் திருமா லின் திருவடிகளிலேயே கால மெல்லாம் அடிமை செய்ய வேண்டும் என்பதனை,

ஒழிவில் காலமெல்லாம
உடனாய மனனி
வழுவிலா அடிமை செயய
வேணடும நாம

எனற பாசுரததில தெளிவு படுத துகிறர். அததுடன நினறு விடாமல பகவான தன திருவ டிகளில அடிமையாய இருககும நிலையை அருளுமுன ஆழ வாரே.

"கண்டே களிக்கின்ற நிங்
கென்றுகொல் கண்கள்
தொண்டே உனக்காய்
ஒழிந்தேன் துரிசின்றி"

தானே உரிமையோடு அடிமை யாய் வந்தேன் என்கின்றுர.

கடவுள் நெறி கொண்டால் காதல் நெறியில் உயிர்கள செல்ல இயலாது என்றும், கட வுளை அடையவேண்டுமெ னில காதலை முறறும் கைவிட வேண்டும் என்பர் சிலர்.

ஆனால் பக்சிச் சுவையை இலக்கியச்சுவையாக்கித் தமிழ் நயமும், ஓசை நயமும், பொருள் நயமும், சொல் நயமும் கலந்து படிப்பவர்களுக்கு தெய் வீக உணர்ச்சியையும் லௌகீக உணர்ச்சியையும் ஒரே நேரத்தில் உண்டாக்கும் பாடல்கள் நாலா யிரத் திவ்ய பிரபந்தத்தில் மிகுதியாகவே உள்ளன.

அக இலக்கியங்கள் காதலை மிகைப்படச் சித்திரிக்கும். ஆனால் சமய இலக்கியங்களில் காதலுக்கும் பக்தியே மூலமாகி விடுகிறது. சமய இலக்கியங் களில் இத்தன்மையை கண் ணதாசன் (அர்த்தமுள்ள இந்து மதம் - இரண்டாம் பாகம் வானதி பதிப்பகம்) தேனிலே மருந்து குழைப்பது போல் காத லிலே பக்தியைக் குழைத்தால் சராசரி மனிதனை அது வசப் படுத்துமென்றே சமய இலக்

கியங்கள் அவ்வாறு செய்தன என்பார்.

வைணவ சைவ சமய இலக்கியங்களுள் "வைணவப் பெருமக்களே சங்க கால நெறியை ஒட்டிப் பிற்காலத் தத்துவ முறையைக் கலந்து ஓர் அகப்பொருள் நெறியினை அமைத்துக் காட்டிய பெருமையைப் பெற்றனர்." (டாக்டர் ந. சுப்பு ரெட்டியார். சடகோபன் செந்தமிழ்) என்பதனால் வைணவ இலக்கியத்தின் காதற் பக்திச் சுவை இனிதே புலப்படும்.

இவ்வகையில் நம்மாழ்வாரும் அகப்பொருள் இலக்கணத்தைத் தழுவிப் பல நிலைகளில் பல பாசுரங்களைப் பாடியிருக்கின்றூர்.

நாரையும், அன்றிலும், நந்தா விளக்கும், நாள்மதியமும் தன் செயலில் மயங்குகின்றன போல் கண்ணன் மேல் காதல கொண்ட கண்களுக்குத் தோற்ற மளிக்கின்றது. ஆதலால் அவையும் பகவான் மேல் காதல் கொண்டு மயங்குகின்றன என் பதனை,

நைவாய எம்மேபோல் நாண்
மதியே நீ இந்நாள்
மைவான் இருள் அகற்ருய்
மாழாந்து தேம்புதியால்
ஐவாய் அரவணைமேல் ஆழிப்
பெருமானார்
மெய்வாசகம் கேட்டு உன்மெய்
நீர்மை தோற்ருயே

என்று நிலவு தன் நீர்மை இழந்ததாகப் பாடுகிருர்.

எம்பெருமானின் அவதார லீலைகளை நினைகக நினைக்கத் தலைவி வளையல் இழந்தாள் எனபதனை,

மாலுக்கு வையம் அளந்த
மணாளற்கு
நீலக்கரு நிறமேக நியாயற்கு
கோலச் செந்தாமரைக்
கண்ணற்கு என்கொங்கலர்
ஏலக் குழலி இழந்தது சங்கே

எனத் தாய் நிலையில் நின்று தவிக்கின்ருர்.

தீயையும், காற்றையும் திருமாலெனத் தழுவும் தலைவி,

"உண்ணுஞ் சோறு பருகுநீர்
தின்னும் வெற்றிலையுமெல்லாம்
கண்ணன்"
என்றே வாழ்கிருள்.

தேனும் பாலும் கன்னலும் அமுதமாகித் தித்திக்க ஒப்புயர் வற்ற சொர்க்கமும் அவர்க்கு வேண்டாதாகி விடுகிறதோ. இறப்பிற்குப் பின் சொர்க்கமோ நரகமோ எவ்வாறேனும் ஆகுக. ஆனால் இப்பிறப்பில், பிறப்பில் பல பிறவி எடுத்த எம்பிரானையே மறவாமல் நினைக்க விழைகிறேன் என்கின்ருர்.

"திருமாலிருஞ்சோலை மலை
யென்றேனென்ன
திருமால் வந்து என் நெஞ்சு
நிறைப் புகுந்தான்"

என்று தன் நெஞ்சு நிறைந்தும் கேட்பவர்தம் நெஞ்சும் நிறையக் கூறும் ஆழ்வார் நம்மையும் நம் துயரங்கள் போக,

தொண்டர்நும் தம்துயர்போக
நீரேகமாய்
விண்டு வாடா மலரிட்டு
நீரிறைஞ்சுமின்

என்று மடபபின்னை கேள்வனை வாடா மலரிட்டு ஆராதிக்கும் முறையினைக் கூறுகிருர்.

வானம், வளி, தீ, நீர், நிலம் எனறு இவை மேல் படர்ந்திருக்கும் அனைத்தின் உடலின உயிராய் மறைந்து எங்கும பரந்து நிறகும் ஆழிப்பிரான்

எல்லியும் காலையும்
தன்னை நினைத்தெழ
நல்ல அருள்கள்
நமக்கே தந்து அருள்செய்வான்

ஏனெனில் நினைத்துப்பார்... கின் இவ்வுலகில் நிலையற்... வாழ்க்கை வாழ்ந்து கழி... தோர், கடல் மணலினும் அ... கமாவர்.

நினைப்பான் புக்கில் கடல்எக்கலி...
நுண்மணலில் பல
எனைத்தோர் உலகங்களும்
இவ்வுலகு ஆண்டு கழிந்தவ

எனவே குவலயாபீடம் எ... னும் யானையை அழித்தவ... பாதம் பணிமின்கள் என்கிரு...

கொண்ட பெண்டிரும், பெ... மக்களும் உற்ருர் உறவி... ரும் நாம் உயர்ந்திருக்கும்போ... தான் நம்மை அண்டியிருப்ப அட்டைகள் போல் சுவை... பர். தாழ்வுறின் நம்ம... விட்டு ஒதுங்குவர் என்பதா நமக்கு இவ்வுலகின் அனை... துப் பொருளுக்கும் மூலமா... முதல்வனாய் நம் பகவா... இருப்பதால் அவன் தாள்தா... நமக்குச் சரண் என சரணை... யும் சரணுகதித் தத்துவத்தை... கூறுகிருர்.

"துணையும் சார்வுமாகுவார் போ...
சுற்றத்தவர் பிற...
அனைய வந்த வாக்கமுண்டேல்
அட்டைகள் போல் சுவைப்...
கனையொன்ருலே யேழ்
மரமுமெய்த எங்கார் முகி...
புனையென்றுய்யப் போகிலல்லா...
இல்லை கண்டீர் பொரு...
என்றும்,
கண்ணன் அல்லால் இல்லை
கண்டீர் சர...

என்றும் பகவானின் திருவ... ளையே சரணடைய வேண்(... என்கின்ருர்.

பகவான் கீதையில் "வாழ்ந்து வரும் உயிர்கட்கெல்லாம் விதை நானே" என்று கூறியபடியால் உயிர்களுக்குள் உயிராய் விளங் கும் அவனன்றி நானேது? என நெஞ்சமும் அவன்தானே நெஞ் சத்துள்ளிருக்கும் உயிரும் அவன் தானே. ஆதலின் நான் கூறிய யாவையும் அவன் கூறிய துதான். இவ்வாறு என் நெஞ் சத்துள்ளிருந்து இன்தமிழ் கவி மொழிந்தவன் யார்? வன்னெஞ் சம் கொண்ட அரக்கன் இரணி யனை மார்பு பிளந்தவன், மன் னர்கள் அஞ்சும்படியாய் பார தப்போரில் பாண்டவர்க்காய்ப் படைதொட்டவன். இவ்வாறு தன்னைச் சரணடைந்த பிர கலாதனுக்கும் பாண்டவர்களுக் கும் அருள் செய்ததுபோல பக வான் நமக்கு அருள் செய் வான்" என்பதனையே

என்நெஞ்சத்து உள்ளிருந்து இங்கு
இருந்தமிழ்நூல் இவை மொழிந்து
வல்நெஞ்சத்து இரணியனை
மார்பு கிடந்த வாட்டாறனை
மன்அஞ்சப் பாரதத்துப்
பாண்டவர்க்காய்ப் படை
தொட்டான்
நன்னெஞ்சே நம்பெருமான்
நமக்கருள்தான் செய்வானே

என்கிறார். ஆதலின்,

"கண்ணன் கழலிணை நண்ணும்
மனமுடையீர்"

"நீர் நுமது என றிவை
வேர் முதல் மாய்த்து இவை
சேர்மின்"

என்று கூறுகிறார். அப்படிச் சேர் வதால் நீவிர் பெறக்கூடியது யாதெனில்

"எண்ணும் திருமாமம் திண்ணம்
நாரணமே"

என்கின்றார்.

கமபநாடாரால ஆரா அமுதக கவி ஆயிரம எனப போறறப பெறற நமமாழவாரின அமுதக் கடலின ஒருசில துளிகளையே மிக மிகச சுருககி அடியேனின சிறறறிவிறகு எட்டிய வகை யில ஆசை மீதூரத தநதுள ளேன. இன்னும ஆழவாரதம பாசுரங்களில ஆழுஙகாலபட உயர்வற உயரநலம உடையவ னும், ஆழ்வார் பெருமககளும அடியேனுககு அருள புரிவாரக ளாக என்று வேணடுவதுடன நாமெல்லாம் வையம அளந தானின் பெருமைகளைப் பேசி அவன்தன் புகழ்பாடி அவன்தன் திருப்பாதம் சார்வோமாக.



# அறத்தின் வடிவே கண்ணன்

திரு. எஸ். ரங்கநாதன் - சென்னை.



எல்லோருக்கும் கண்ணனிடம் ஈடுபாடு உள்ளது. தீவிர அத்வைத மகான்கள்கூட கண்ணனிடம் ஈர்க்கப்படுகிறார்கள். ஆனால், விந்தையாக, பெரும்பாலான மக்கள் அவனிடம் பக்தி உள்ளவர்களாக இருந்தும், கண்ணன் அறத்தை மீறி செயல்பட்டிருக்கிறான் என்ற அவதூறை நம்புபவர்களாகவும் இருக்கிறார்கள்.

நல்லோர்களைக் காப்பதற்கும், கொடியவர்களை ஒடுக்குவதற்கும், அறத்தை நிலைநாட்டவும் அவசியம் ஏற்படும் பொழுதெல்லாம் தான் தோன்றி வருவதாக கண்ணன் உரைத்திருக்கிறான். இவ்வாறு தெளிவாக உரைத்திருப்பவன், அதற்கு மாறாக நடந்து கொண்டிருப்பானா என்று நாம் ஆழ்ந்து சிந்தித்தோமானால், அவன் இம்மியும் தம் பிறவியின் நோக்கத்திலிருந்து ஒருபொழுதும் மாறுபடவில்லை என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

அறம் என்பது என்ன என்பதையே சரிவரப் புரிந்து கொள்ளாமல் தீர்ப்பு கூற முற்பட்டால் குழப்பம்தான் உண்டாகும். அறம் என்பது சாதாரண அறம், சிறப்பு அறம் என இரு வகைப்படும். சில சூழ்நிலைகளில் சாதாரண அறம் சிறப்பு அறத்திற்கு முரண்படும். அவ்வாறு செய்தல் அறத்தை மீறின செயலாகாது. "பொது விதி தன்னை, தனி விதி மிஞ்சும்" என்பதுதானே நிலையான விதி.

அவசரப்பட்டுக் குறை கூறிய வாலியிடம், "அறத்தின் சிறப்பியல்புகளை எல்லோராலும் எல்லா சந்தர்ப்பங்களிலும் எளிதாக புரிந்து கொள்ளமுடியாது. பெரியோர்கள்தான் அதைச் சரியாகப் புரிந்து கொள்ள இயலும்" என்று இராமன் சுட்டிக் காட்ட, முடிவாக வாலியும் இக்கூற்றிலுள்ள உண்மையை அப்படியே ஏற்றுக்கொண்டதையும் நாம் இங்கு நினைவுகூர்தல் பயனுள்ளதாகும். திருவள்ளுவரும் குறள் 30வது அதிகாரம் 2வது பாவில் "பொய்ம்மையும் வாய்மை இடத்த புரை தீர்ந்த நன்மை பயக்கும் எனின்" என்று விளக்கியுள்ளார்.

மேற்கூறிய கருத்துக்களின் அடிப்படையில் கண்ணனின் ஒவ்வொரு செயலையும் ஊன்றிக் கவனித்தோமானால், ஒவ்வொரு செயலாலும் அறம் வலுப்பெற்றது என்றும், அறத்தை மீறியவர்கள் தண்டிக்கப்பெற்றார்கள் என்றும், தீயோர்கள் வளர்ச்சி தடுக்கப்பட்டது என்றும் புலனாகும். பீஷ்மர், த்ரோணர், கர்ணன் முதலியோர் கொல்லப்பட்டதனால் அறத்திற்குப் போராடும் பாண்டவர்கள் வெற்றிபெறவும், அரசுரிமையை அநீதியாக பறித்

துவைத்துக்கொணடு, அதை நிலைநிறுத்தப் போரிடும் துரியோதனன் ஒடுக்கப்படவும் முடிந்தது.

பீஷ்மரின் அறம் மீறிய செயல்களையும் அவர் பெற்ற தண்டனையையும் நோககுவோம். (1) காசிராஜன் பெண்களின் உள்ளக்கிடக்கையை அறிந்து கொள்ளாமலேயே, தன் தம்பிக்காக அவர்கள் மூவரையும் கவர்ந்து வந்ததும், அதன் விளைவாக ஒரு பெண்ணின் வாழ்வைப் பாழ் படுத்தியது. (2) தன் தம்பி பிள்ளை கண்ணில்லா த்ருதராஷ்டிரனுக்காக, தன் தோள் வலிமை கொண்டு மிரட்டி, காந்தாரநாட்டு இளவரசியை கேட்டுப்பெற்றது. (3) அரசவையில் த்ரௌபதி அவரிடம் நியாயம் கேட்டபொழுது நியாயம் அற்ற முறையில் முடிவு சொன்னது. த்ரௌபதியை முடியைப் பற்றி இழுத்து, துகில் உரித்தபொழுது வாளாவிருந்தது. இத்தகைய கொடுமைகளைப் பெண்மைக்கு இழைத்ததற்காக, ஒரு பெண்ணை (சிகண்டியை) சாக்காக வைத்து அடிக்கப்பட்டார்.

த்ரோணர் சேனாதிபதியாக இருந்தபொழுது, அறப்போர் முறைக்கு மாறாக, பல அதிரதர்களுடன் சேர்ந்து அபிமன்யுவைத் தாக்கி எல்லோரும் ஒன்று கூடி அவனைக்கொல்வதில் பங்கு கொண்டதற்கு அவருக்குக் கிடைத்த தண்டனை மிகக் குறைவே.

பாண்டவர்களிடம்தொடர்ந்து விரோதம் பாராட்டுவதற்கும், அவர்களை எண்ணற்ற கொடுமைக்குள்ளாக்கவும், துரியோதனனைத் தூண்டி வந்ததில் சகுனியின் பங்கைவிட கர்ணன் பங்கே அதிகம். தன்னால் பாண்டவர்களை வெல்ல முடியும் என்று வீண தைரியம அளித்தே, மேன்மேலும் துனபுறுத்தச் செயதான. சபையில த்ரௌபதி அவமானப்படுத்தப பட்ட பொழுது, நாககூசாமல் த்ரௌபதியை வேசி என்றழைத்தான். அறம் பிறழ்நது பலர ஒனறு கூடி அபிமனயுவைத் தாக்கிக்கொனற கயவர்களில் இவனும் ஒருவன். நட்பு, நன்றிக்கடன் என்றால் இவ்வாறு தான் செயல்பட வேண்டும் என்று நியதியா? முன்னர் வாழ்ந்த இராவணன் தம்பி கும்பகர்ணன், அதே காலத்தில் வாழ்ந்து வந்த துரியோதனன் தம்பி விகர்ணன் இருவரும் தத்தம் அண்ணன்மார்களை இடித்துக்காட்டி திருத்த முயன்று, பலனில்லாமல் போன பிறகு, அண்ணனுக்காக உயிர் நீத்துத் தம் கடமையைச் செய்தவரகளின் உதாரணத்தைப் பின்பற்றியிருக்கலாமே. எனவே, கரணனுக்கும் மிகக்குறைந்த தண்டனையே கிடைத்தது.

பீஷ்மர், த்ரோணர், கரணர் ஆகியோர் இவ்வளவு செய்திருந்தும், அவர்களிடம் இருந்த மற்ற சிறப்புகளுக்காக, அவர்கள் கண்ணன் தலையீட்டினால்தான் வெல்லப்பட்டார்கள் என்ற கௌரவத்தை அளிப்பதற்கே கண்ணன் தலையிட்டானே தவிர, வேறு வழியில் அவர்களை வெல்ல முடியாது என்பதற்காக அல்ல. கர்ணனும், கௌரவர்களும் தோற்றுப்போன பிறகு, அர்ச்சுனன் த்ருபதனை வென்று பிடித்து வரவில்லையா? கர்ணனும் மற்றவர்களும் முயன்று கைவிட்டபிறகு, அர்ச்சுனன் பொறி அடித்து த்ரௌபதியை ஸ்வயம்வரத்தில் வெற்றி பெற்றான். கர்ணனும் மற்ற கௌரவர்களும் படைவீரர்களும கையாலாகாமல் பாரத்துக்கொண்டிருந்த பொழுது, சிதரசேனன் என்ற கநதரவன் துரியோதனனை சிறைபிடிததுச செலல அரசசனன போய் மீட்டு வந்தான். விராட பர்வத்தில், பீஷ்மர், த்ரோணர், கர்ணன் உள்ளிட்ட கௌரவ சேனையை அர்ச்சுனன் ஒருவனாக தோறகடித்து, அவர்கள் அணிகளையும் வெற்றிச் சின்னமாக கவர்ந்து சென்றான். யுத்த பூமியில் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது, சவால் விட்டு, பீமன் துச்சாதனனை சின்னா பின்னம் செய்த பொழுது கர்ணனோ துரியோதனனோ ஒன்றும் செய்ய இயலாமல் இருந்தார்கள். இருதரப்பாருடைய வலிமையும் இவ்வாறிருக்க சூது செய்ய கண்ணனுக்கு அவசியம் என்ன? மேலும், கண்ணனுக்கு அறத்தின் பால் பாசம் இருந்ததே தவிர, வேறு எவரிடமோ, எதனிடமோ பாசம் கிடையாது. கண்ணனுக்கு நெருங்கிய உறவினனான அபிமன்யுவைக்கூட அவன் காப்பாற்ற முயலவில்லை. பூமியின் சுமையைக் குறைப்பது அவன் பிறப்பின் மற்றொரு நோககம். அதை பாரபட்சமின்றி நிறைவேற்றினான்.

கண்ணன் செய்கைகளில் எவற்றைக் கண்டு மக்கள் மயங்குகிறார்களோ, அவைகளால் பாதிக்கப்பட்ட பெரியோர்களான பீஷ்மரும், த்ரோணரும் இறுதியில் கண்ணனை குறைகூறவில்லை என்பதையும், மாறாக பீஷ்மர் கண்ணனைப் பார்த்துகொண்டே, துதித்துக் கொண்டே உயிர் நீத்தார் என்பதையும நினைத்துப் பார்க்க வேண்டும்.

ஸ்ரீக்ருஷ்ணார்ப்பண மஸ்து.



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## ஆறும் அத்தியாயம்

# தியான யோகம்

உமைப்ரியன்

### பகவான் கூறியது

ஸங்கல்ப ப்ரபவான காமானஸ்த
யக்த்வா ஸர்வான் சேஷத:
மனஸைவேந்த்ரியகராமம்
வினியம்ய ஸமந்தத: ।। (24)

"எண்ணங்களினால் ஏற்படும் ஆசைகள் எல்லாவற்றையும் முற்றுமாக அழித்துவிட்டு, மனத்தின எலலாப் பக்கங் களிலிருநதும, ஐம்புலன்களை யும் முழுவதுமாக அடககிக் கொணடு....."

[விதை ஒன்று மண்ணுக்குள் இருந்தால், செடி ஒன்று வள ரவே செய்யும். ஆம் மண்ணு கிய இந்த உடலில் - உள்ளத்தில் விதையாகிய எண்ணம் இருந் தால், செடியாகிய ஆசைகள்- காமங்கள் வளரததான் செய்யும. ஆம சிறு தீ பெருநதீயாவது போன்று ஆசையானது பேரா சைக்கு, மனிதனை எளிதாக இட்டுச் செல்லும். ஆகவே அறிவாலும், மிக்க உறுதியா லும் ஐம்பொறிகளை அடக்கு தல் அவசியம்.]

சனை: சனைருபரமேத்புத்த்யா
த்ருதிக்ருஹீதயா: ।
ஆத்மஸம்ஸ்தம் மன: க்ருத்வா ந
கிஞ்சிதபி சிந்தயேத்: ।। (25)

"உறுதி கொண்ட அறிவாலும. ஆதமாவின மீது ஒருமுகப் படுததபபடட . மனதாலும் மெதுவாக அமைதியைப் பெறு வாயாக. வேறு எதனையும் மன தில எணணுது இருபபாயாக"

[கலைகளிலே கரை கண்ட வர் களில் பலர, அறிவின இருபபி டமாக திகழபவரகளில பலர, தஙகள மனதில ஆசைகள எனும குறையை, பலவீனத தைக கொணடதால, வாழககை யில் தோல்வி கண்டுள்ளார்கள். நெறியான வாழ்ககை இருந் தாலதான் மனவலிமை எளி தாகக் கிடைத்திடும். இதற்கு மன்தை ஆத்மாவின்கண் ஒருமு கப்படுத்த வேண்டும். அது போது மனம சிற்றின்பங்களின் பால் செலலாது. இறைச சிந் தனையும் சிறிது சிறிதாக நம்முள் வலுக்க ஆரம்பிக்கும்.]

யதோ யதோ நிஸ்சரதி
மனஸ்சஞ்சலமஸ்திரம்: ।
ததஸ்ததோ நியம்யைததாத்மன் யேவ
வசம் நயேத்: ।। (26)

"ஓர் எண்ணத்தில் இருக் காது எப்போதும் அலைந்து கொண்டிருக்கும் மனதானது, எதனால எவற்றின் மீது திரிந்து கொண்டிருக்கின்றது என்பதை அறிந்து, அவற்றிலி ருந்து அதனை(மனதை) விலக்கி, ஆத்மாவின் மீது அது (மனது) செல்லுமாறு செய்க"

[சூழ்நிலைக்கும், வயதிற்கும் ஏற்ப மனிதனின் மனதானது பலவாறு ஆசைகளை மாற் றிக்கொண்டு, மேலும் மேலும் மகிழ்ச்சி அடையவே விரும்பு கின்றது. தவறுகள், தகாதவை கள் என்ன என்பதை அறிந்தும்,



அறிவு அறிவுறுத்தியும், மனதானது அவ்அறிவினை அடக்கி, மயக்கி மறுபடியும் ஆசைகள் எழும்ப இடம் வகுக்கின்றது. இதுபோது, அறிவினை ஆற்றலுடன் செய்ல்படுத்தி மனதை அடக்கச் சிறிது சிறிதாக முயற்சிக்க வேண்டும். இது ஒரு போராட்டமாகவே அமையும். மனது உறுதி பெறும் வரை இது தொடரும். அப்போதுதான் நம் நிலையும் உயரும்.]

ப்ரசாந்தமனஸம் ஹ்யேனம்
யோகினம் ஸுகமுத்தமம்: ।
உபைதி சாந்தரஜஸம்
ப்ரஹ்மபூதமகல்மஷம்: ।। (27)

"மிகவும் அமைதியான மனதை உடைய, ரஜோ குணத்தின் இயல்பை அடக்கிய, பாவமற்ற, தன்னில் பிரம்மத்தைக் கண்டு கொண்ட துறவியே பேரின்பம் பெறுகின்றான்."

[மனதில் அமைதி இருக்க வேண்டுமென்றால் பற்றுகளை ஆசைகளைத் துறக்க வேண்டும். அதற்கு அவ்ஆசைகளைத் தோற்றுவிக்கும் ரஜோ குண உணர்வுகளை அடக்குதல் அவசியம். மனம் அமைதியுடன், அறிவு விழிப்புடனும் இருந்தால், ஆத்மாவானது தூய்மையடைகிறது. அப்போது ஞானியெனும் - துறவியெனும் உயர்நிலை பெற்று, 'பிரம்மஞானி' என்று அழைக்கப்பெறுகிறான். அதுபோது வினைகளால் அவன் தாக்கப் பெறுவதில்லை. வினைகளைக் கடந்த நிலைக்குச் செல்கின்றான்.]

யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம்
யோகீ விகதகல்மஷ: ।
ஸுகேன ப்ரஹ்மஸம்ஸ்பர்ச-
மத்யந்தம் ஸுகமச்னுதே: ।। (28)

"இவ்வாறு மனதை ஆத்மாவின் கண் எப்போதும் நிலைபெறச்செய்து, பாவங்களிலிருந்து விடுவித்துக்கொண்ட துறவியானவன், பிரம்ம ஞானம் எனும் பேரறிவினால் பெறப்படும் பேரின்பத்தை எளிதில் பெறுகின்றான்."

[இரும்பை இழுத்திடும் ஊசிக் காந்தத்துடன் வேறு இரும்புப் பொருள் ஒன்றினை வெகுநேரம் உரசச்செய்தால் அந்த இரும்புப்பொருளும் காந்தச் சக்தி சிறிது பெறுகிறது. அதைப் போன்று பிரம்ம ஞானம் எனும் அந்த பேரறிவு பெற்றவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டால் அவர்களும் நாளடைவில் சிறிது சிறிதாக அந்த பிரம்ம ஞானத்தால் பெறப்படும் இன்பத்தைப் பெறுவர்.]

ஸர்வபூதஸ்தமாத்மானம்
ஸர்வபூதானி சாத்மனி: ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா
ஸர்வத்ர ஸமதர்சன: ।। (29)

"யோகம் எனும் பயிற்சியில் தேர்ச்சி பெற்று எங்கும் சம நோக்கத்தைக் கொண்டவன், மற்றைய உயிர்கள் எல்லாவற்றிலும் தன்னையும், தன்னிடத்து எல்லா உயிர்களையும் இருப்பதாகக் கொள்கிறான்."

[யோகப்பயிற்சி கொண்டு அதில் முழு வெற்றி அடைந்தவன் மனதில் வேற்றுமை எண்ணம் தோன்றாது. உயிர்களைப் படைத்திட்ட பிரம்மனையும், அப்பிரம்மன் படைத்திட்ட உயிர்களில் மிகவும் அற்பமானதுமான புல்லையும் ஒன்றாகவே கருதுவான். அதாவது எல்லா உயிர்களையும் ஒன்றாகப் பார்த்திடும் உயர் ஞானத்தைப் பெற்றுவிடுகிறான்.]

யோ மாம் பச்யதி ஸர்வத்ர
ஸர்வம் ச மயி பச்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி
ஸ ச மே ந ப்ரணச்யதி ।। (30)

"யார் ஒருவன என்னை எல்லாவற்றினிடத்தும், எல்லாவற்றையும் என்னிடத்திலும் பார்க்கின்றானோ, அவனுடைய பார்வையிலிருந்து நான் மறைவதில்லை. அவனும் என் கண்பார்வையிலிருந்து மறைவதில்லை."

[தன்னுயிர்க்கும் மற்றைய உயிர்களுக்கும் இடையே எந்த விதமான வேறுபாடும் காணாத உயர்ந்த நிலை அடைந்த பிறகு, உயிர்கள் எதனால் யாரால படைக்கப்பட்டன என்ற ஞானக் கேள்வி எழுகிறது. பலவகையான நகைகளைப் பார்த்து மகிழ்ந்த மனம், இவையாவும் பொன்னால்தான் செய்யப்பட்டன என்ற அறிவு கிடைக்கிறது. அதுபோன்ற இவ்வுயிர்கள் யாவும் அந்தப் பரமபொருளிலிருந்துதான் உருவாகின என்ற ஞானத்தைப் பெறுகின்றான் யோகி. அந்த உண்மையை அறிந்தபிறகு தன்னுள்ளேயே அந்த பரம்பொருளைப் பார்க்கின்றான். அதனால் எந்த நிலையிலும் கால நேரத்திலும் பரமனைப் பற்றிய ஞானத் தொடர்பு அவனுள் தொடர்ந்து அமைகிறது.]

ஸர்வபூதஸ்திதம் யோ மாம்
பஜத்யேகத்வமாஸ்த்தித: ।
ஸர்வதா வர்த்தமானோபி ஸ
யோகீ மயி வர்ததே ।। (31)

"இருப்பது ஒன்றே (பிரம்மம் என்பவன் ஒருவனே) என்பதை நிச்சியப்படுத்திக் கொண்டு, எல்லா உயிர்களிடத்தும் இருக்கும் என்னை (பகவானை) வழிபடும். துறவியானவன் எந்த நிலையில் இருந்தாலும் என்னுள் இருப்பவனாகக் கருதப்படுகிறான்."

[எல்லா உயிர்களிடத்தும் இருக்கும் பிரம்மம் என்பது ஒருவன்தான் என்பதை, எல்லாவற்

நிறைந்த மூலப்பொருள் பிரம்மம் ஒன்றுதான் என்பதை அறிந்து கொண்ட ஞானியானவன் எங்கும் எதிலும் பிரம்மத்தையே பார்க்கிறான். அதுபோது ஓய்வு, வினையாற்றல், தியானம் என்ற நிலைகளிலும் அவ்யோகியானவன் இருந்தாலும், அவன் பிரம்மத்துடன் இருப்பதாகவே கருதப்படுகிறான்.]

ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம

பச்யதி யோऽர்ஜுன ।

ஸுகம் வா யதி வா து:கம்

ஸ யோகீ பரமோ மத: ।। (32)

"அர்ச்சுனா, தன்னையே உவமையாகக் கருதி இன்பத்தையும், துன்பத்தையும் எப்போதும் ஒன்றாகக் காண்கின்றவனே பரம யோகி என அழைக்கப் பெறுகிறான்."

[மனிதன் தானவேறு, தன் கை, கால்கள் வேறு என்று நினைப்பதில்லை. தனக்கு ஏற்படும் இன்ப துன்ப உணர்ச்சிகளுக்கு அவனுடைய உடல் உறுப்புகளும் காரணங்களாக அமைகின்றன. ஆகையால் அவன் தன் கைகளுக்கு ஒரு விதமாகவும், கால்களுக்கு ஒருவிதமாகவும் மதிப்புத் தருவதில்லை. எல்லாவற்றையும் போற்றிப் பாதுகாக்கவே செய்கின்றான். இது ஒரு சாதாரண மனிதனின் மனப்பாங்கு. ஆனால் ஒரு ஞானியானவன், இந்த நிலையைத் தாண்டி, தன் உடல் உறுப்புக்களைப் போன்றே மற்றைய உயிர்களையும் எண்ணிப் பார்க்கின்றான். ஆம், அவன் தான் வேறு, தான் வாழும் உலகம் வேறு என்று நினைப்பதில்லை. அதனால் மற்றைய உயிர்கள் துன்பப்படும் போது தானும் துன்பம் கொள்கின்றான். இதனை 'வாடிய பயிரைப் பார்த்தபோதெல்லாம் தானும் வாடுவதாகக்' கூறிய வள்ளலாரின் நிலைக்கு ஒப்பிடலாம். அத்தகைய ஞானியானவன் உலக மேன்மைக்காகவே வாழ்த தலைப்படுகின்றான். அத்தகைய அவனே பரமயோகியாகப் போற்றப்படுகின்றான். ]

**அர்ச்சுனன் கூறுவது :**

யோऽயம் யோகஸ்த்வயா ப்ரோக்த:

ஸாம்யேன மதுஸூதன: ।

ஏதஸ்யாஹம் நபச்யாமி சஞ்சலத்-

வாத்ஸ்திதிம் ஸ்திராம்: ।। (33)

"மதுசூதனா! "சமமமாகப் பார்த்தல்" என்ற நீங்கள் போதித்த இந்த யோகமானது, என்றும் உறுதியாக அமைந்திடும் என்று, எப்போதும் அலைபாய்ந்து கொண்டிருக்கும் என் உள்ளம் கருதவில்லை"

[எப்போதும், எங்கும் சமமான மனநிலையை பெற்றிருத்தல் என்பது மிகவும் கடினம். அந்த நிலையை அடையவே பகவான் அதனை ஒரு யோகமாக - சிறந்த பயிற்சியாகக் குறிப்பிடுகிறார். மாறி மாறி வரும் எண்ணங்களைக்கொண்ட மனதில் சமநோக்கு எனும் பண்பட்ட மனநிலை உண்டாவது என்பது கட்டுப்பாடு எனும் சிறந்த பயிற்சிக்குப் பிறகே கைகூடும். இங்கு அறிவுரை சொல்வது எளிது, ஆனால் பின்பற்றுவது - செயற்படுத்துவது மிகவும் கடினம் என்று எண்ணும் சாதாரண மனிதனின் உள்ளக்கிடக்கை எடுத்துக்காட்டப்படுகிறது.]

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண

ப்ரமாதி பலவத்த்ருடம்: ।

தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே

வாயோரிவ ஸுதுஷ்கரம்: ।। (34)

"கிருஷ்ணா, மனமானது எப்போதும் அலையும் தன்மை கொண்டது, கலங்கிடச்செய்வது; ஆற்றலுடையது; உறுதி கொண்டது. அதனை அடக்கி ஆள்வது என்பது, காற்றினை அடக்குவது போன்று, எளிதானதன்று என்று நான் நினைக்கிறேன்"

[இங்கு மனதின் இயல்புகள் நான்கு நிலைகளில் கூறப்படுகிறது. ஓர் எண்ணம் கொண்டு விளங்காமல் ஆசைகளுக்கேற்றவாறு எண்ணங்களைக் கொண்டு மனமானது எப்போதும் அலைபாய்ந்து கொண்டிருக்கிறது. இது அலைதல் எனும் 'சஞ்சலத்'தன்மையாகும். மனமானது மனிதனின் உணர்வுகளை கொல்லாமல் கொல்லுகின்றது. எதிர்பார்ப்பது கிடைக்காவிட்டால் மனம் பலவாறு நொந்து இந்த உடலைத் துன்புறுத்துகின்றது. ஏமாற்றங்கள் பெறக்கூடாது என்று எப்போதும் மனம் எண்ணி இந்த உடலைக் கலக்கிக் கொண்டிருக்கின்றது. இது 'பிரமாதி' எனும் நிலை. அறிவினை அழித்திடும் வலிமை, ஆற்றல் கொண்டது மனம். இது 'பலவத்' எனும் நிலையாகும். எதிர்பார்த்து எண்ணியது கிடைக்காவிட்டால் மனம் தன்னை மாற்றிக்கொள்வதில்லை. அவற்றின் மீதே கருத்தைக்கொண்டு, அதனைப் பெறவே, அதனை வெற்றிக் கொள்ளவே தன்னை மேலும் தீவிரப்படுத்திக்கொள்கிறது. இது 'த்ருடம்' எனும் நிலைமையாகும். காற்றை ஒருவன் வெறும் கைகளால பிடித்து வைத்துக்கொள்வது என்பது முடியாத காரியமாகும். அதனைப் போன்றது அலைபாயும் மனத்தின் தன்மை.]

(தொடரும்)





# இசை

திரு. டி.எல். நரசிம்ஹமூர்த்தி
கிருஷ்ணகிரி.

இசையினைப் பற்றி என்னுடைய சிறிய அனுபவத்தை சமர்ப்பிக்கிறேன்.

ரிக்வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் ஆகிய நான்கு வேதங்களையும் இராமாயணம், மகாபாரதம் என்ற இரண்டு இதிகாசங்களையும் நமது முன்னோர்கள் நமக்கு அளித்த சிறந்த பொக்கிஷமாகும்.

கிருதயுகத்தில் தபசு மேன்மையானது திரேதாயுகத்தில் ஞானம் சிறந்தது. துவாபர யுகத்தில் யக்ஞம் சிறந்தது கலியுகத்தில் பக்தியே பிரதானமானது.

பகவானிடம் லயித்து மோட்சத்தையும் க்ஷேமத்தையும் அடைய பல மார்க்கங்களில் ஜபம், தபம், ஹோமம், யாகம், அர்ச்சனை, பாதசேவை, நாதோபாசனை ஆகியனவும் அடங்கும். மேற்சொன்ன ஜபம், தபம், ஹோமம், யாகம் ஆகியவை ரிக்வேதம் மற்றும் யஜுர் வேதம் மூலம் தெய்வ கடாட்சத்தை அடையலாம். ஆனால் அதனை அடைய மிகுந்த சிரமும் பொருளும் இருந்தால்தான் முடியும். அப்படி சிரமமும் பொருளும் செலவு செய்து கிட்டாமலும் போகலாம். அடுத்து அதர்வண வேதம் என்பது துர் தேவதைகளை வசப்படுத்தி மக்களுக்கு தொல்லை தரும் தீய வழிகளுக்குச் செல்ல வாய்ப்புள்ளது.

சாமவேதத்தின் மூலம் நாதோபாசனையால் தெய்வத்தை வெகு சீக்கிரம் வசப்படுத்த வாயப்புண்டு. எந்தவிதமான சிரமமில்லலாமல் எங்கும் எளிதில் இசையினால் தெய்வத்தை வசப்படுத்திக்கொள்ளலாம். இம் மாதிரி பக்திப் பாடல்களினால் தெய்வ கடாட்சம் பெற்ற பல பெரியோர்கள் உண்டு.

"பாட்டுத் திறத்தாலே இவ்வுலகைப் பாலிடத்திட வேண்டும்" என்று பாரதி பாடியதற்கு இணங்க இறைவன் மனிதனுக்கு அளித்த சன்மானங்களில் இசையும் ஒன்று. இறைவனது நாத ரூபமாகிய இசையானது இருவகைதான். ஒன்று செவிக்குப் புலனானது மற்றொன்று செவிக்கு புலனாகாதது. இவ்வுண்மையைத்தான் "கிட்ஸ்" என்ற ஆங்கிலக் கவிஞர் பின்வருமாறு பாடினார்.

Heard melodies are sweet
But those unheard are sweeter

செவி உணர்ந்த கானம்தான்
சீர் இனிமைத்தாயிடினும்
செவியுணராக்கானம் இனும்
செப்பரிய இனிமைத்தாய்

## இசையும் வைத்தியமும்

அஸாவேரி - தலைவலியைப் போக்கும்.

பைரவி - சிலேஷ்மம், கபம் முதலியவைகளைப் போக்கும்.

கரகரப் பிரியா - பசியை மறக்க செய்யும்.

தோடி - சிலேச்மத்தினால் ஏறபடும் குற்றங்களைக் குணப்படுத்தும்.

ஹிந்தோளம் - வாதம் கபத்தினால் உண்டாகும் நோய்களைத் தீர்க்கும்.

நீலாம்பரி - குழந்தைகளின் அழுகையை நிறுத்தித் தூங்க செய்யும்.

ஸாரங்கா - பித்த கொதிப்பினால் உண்டாகும் நோய்களைப் போக்கும்.

## சங்கீதமும் ஜோதிடமும்

ஜோதிட முறைப்படி சங்கீத காரகன் கிரகம் சுக்கிரன். சங்கீதத்தில் உள்ள ஏழு சுரங்களுக்கும் தனித்தனியே கிரகமும் ராசியும் உண்டு.

| ஸ்வரம் | கிரஹம் | ராசி |
|---|---|---|
| ஸ | சூரியன் | சிம்மம் |
| ரி | புதன் | மிதுனம், கன்னி. |
| க | சனி | மகாம், கும்பம். |
| ம | சுக்கிரன் | ரிசபம், துலாம். |
| ப | சந்திரன | கடகம். |
| த | செவ்வாய் | மேஷம், விருச்சிகம் |
| நி | குரு | மீனம் |

இம்மாதிரியே சில ராகங்க ளுக்கும் ராச்சுகும் சம்பந்தம் உண்டு.

ராகம் - ராசி

வஸந்தா - சிம்மம்
பூபாளம் - கன்னி
மாளவம் - மிதுனம்
ஸ்ரீராகம் - ரிசபம், துலாம்
பங்காளா - மீனம்
சாரங்கா - தனுசு
பஞ்சமம் - விருச்சிகம், மேஷம்
பைரவி - மகரம், கும்பம்.

சனிக்குச் சொந் தமான பைரவி ராகம் கம்பீரம் கருணை தன்மை கொண்டது. சுக்கிரனுக்கு ஸ்ரீராகம் அன்பு மென்மை தன்மை கொண்டது.

ராசி சக்கரத்தில் புதன், சுக் கிரன் அல்லது குரு சுக்கிரன் சேர்க்கை இரண்டிலோ அல் லது ஐந்திலோ இருந்தால் அந்த ஜாதகன் சங்கீதத்தில் கரை கண்டவனாக இருப்பான்.

இரண்டில் சுக்கிரனும் செவ் வாயும் சேர்ந்து இருந்தால் பக் திப் பாடல்களைப் பாடுவனாக இருப்பான்.

இரண்டில் சனி இருந்தால் கருணரஸப் பாடல்களைப் பாடு வான்.

இரண்டாம் இடம் பாட்டுக்கு முக்கியமான இடம் அடுத்தது பஞ்சம ஸ்தானம். புத, சுக் கிர சந்திரர்கள் சங்கீதத்தை போஷிக்கும் கிரகங்கள்.

ஆகவே இசை வைத்தியம், ஜாதகம் ஆகிய மூன்றுக்கும் மிகுந்த ஈடுபாடு உண்டு என் பதை மேலே கூறப்பட்ட விரி வுரையினால் விளங்குகிறது.

என்னுடைய பாட்டனார் பண்டிட் ராமசந்திரய்யா என் பவர் தஞ்சை சரபோஜி மகா ராசாவிடம் ஆஸ்தான பண் டிதராக இருந்ததாலும், என் னுடைய பாட்டியார் மைசூர் சமஸ்தான ஆஸ்தான பண்டி தர் வீணை ருக்குமணி அம் மாள் அவர்கள் வழியிலே வந் துள்ளதாலும் இசையினை யும் ஜோதிடத்தையும் எங்கள் குடும்ப பொக்கிஷமாக சுமார் 150 ஆண்டுகளாக வளர்த்து வருகிறோம்.



ஸ்ரீவீரபிரம்ம சுவாமி கோயில் - கடப்பை மாவட்டம் (ஆ.பி.)

# சீராரும் வில்லிபுத்தூர் சுடர்க்கொடி

திரு. V. ராகவன் - சென்னை.

வடமதுரை மன்னனாம் கம்சனால் வில்விழாவெனச் சொல்லி கிருஷ்ணனும் பலராமனும் அழைத்துவரப்பட்டனர். அவ்விழாவிலே "வெற்றிவாகை சூடிடுமவர்கள்" என்பதனைக் காட்டிடும் வண்ணம் தாங்கள் அணிந்து கொள்ளத் தக்கதான மாலையைத் தேடி ஒரு மாலாகாரரை நாடினான் கிருஷ்ணன். இது நிகழ்ந்தது கிருஷ்ணவதார காலத்தில். இக்கலியுகத்தில் வாழ்ந்த பெரியாழ்வார் இன்று நடந்தது போல் கொண்டு, ஒருமாலைக்காகக் கிருஷ்ணன அலைவதோ என்று மனம் வருந்தினார். ஆகவே தானே மலர் மாலை கட்டி அர்ச்சையாய்க் கோயில் கொண்டிருக்கும் அவனுக்குச் சூட்டிப்பார்த்து மகிழ முனைந்தார். அவன் உகப்புக்குரியதான பிணையல், கண்ணி, கோவை எனப் பலவிதமான மாலைகள் கட்ட நினைந்து, மணம் பரப்பிடும் பூந்துளபம், செந்தாமரை, வெண்தாமரை, செங்கழுநீர், நீலோற்பலம், மல்லிகை, முல்லை, மாதவி முதலிய நீர்ப்பூ, நிலப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ எனப் பல மலர்களைத் தந்திடும் நந்தவனம் ஒன்றை நன்கு பராமரித்து வந்தார். இவ்வாறு இவர் மாலை கட்டிச் சூட்டி மகிழ்ந்தாராயினும் அவன் மகிழ்ந்தது இவர் பேணிக்காத்து வளர்ந்து வரும் "மாதவிக்கொடியில் பூத்த ஒரு கொடிப்பூவை" அன்றோ!

இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவராய் நாலு கவிப்பெருமாள் எனப் போற்றப்பெறும் திருமங்கையாழ்வார் "மண்கொள் மாதவி நெடுங்கொடி விசும்புற நிமிர்ந்தவை முகில் பற்றி" (பெரிய திருமொழி 1-2-6) என்று இமயமலைச்சாரலில் உயரந்த சிகரத்தேயமைந்த "திருப்பிரிதி" என்னும் திவ்விய திருப்பதியின் இயற்கை எழிலிலே மனத்தைப் பறிகொடுத்து நிற்கிருர். மண் வளத்தால் அங்கு மாதவிக்கொடி நீண்டுயர்ந்து வான் முகட்டையும் எட்டி வளர்ந்திருக்கிறது. ஆதாரமற்ற வானிலே நிலையாக நிற்க அதற்கு ஓர் ஆதாரம் தேவைப்படுகிறது. அவ்வானத்தே சஞ்சாரமிடும் மேகக்கூட்டத்தினைக் கொம்பாகப் பற்றிக் கொண்டு நிற்கிறதாம். இவ்வாறு இயற்கை எழிலே மட்டும் கட்டுண்டு கவிபாடும் கவி மட்டும் அல்லவே இவ்வாழ்வார்.

மேகம் வானுச்சியிலே சஞ்சாரமிடுவதுபோல் வான்முகட்டை எட்டிப் பிடிக்கும் இமயச் சிகரத்தே திருப்பிரிதியென்னும் தலத்திலே நாராயணன வாசம் செய்கின்ருன். மேலும் உலகைக் காப்பதான சிந்தனையே இவன் உள்ளத்திலே ஓடிக் கொண்டிருக்கிறது. கண்ணைப் பறித்திடும் ஒளிமிக்க மின்னலைத் தன்னுள்ளே கொண்டிருக்கும் மேகம் போன்று இவனும் மின்னற்கொடியாளான பெரிய பிராட்டியாரைத் தன் மார்பில் கொண்டிருக்கிருன். மேகமோ நீருண்ட காலத்து கருத்தும், பொழிந்து வறண்ட நிலையில் வெளுத்திருக்கும். இவனும் எப்பொழுதும் கரிய திருமேனியனாய் அருள மழைபொழிந்திடுபவன். எவவளவு செய்த பினனரும் தான ஒன்றும் செயயவிலலையே என ஏங்கி நிறபவன. கடலினின்றும் நீரைப் பருகிய போதிலும் அதனையும் விலக்கிடாது அங்கும் மழையைப் பெய்விக்கும் மேகம். இவனும் இன்னார் இனியார் எனப்பாராது அனைவருக்கும் கருணை மழையைப் பொழிபவன். இவ்வாறு மேகத்தோடு ஒப்புமை கூறலாம்படி திகழுபவன் ஆகையாலே இவனை "முகில்" எனச சொல்லத் தட்டிலிலையே.

மாமுனிவர துர்வாசரின் கடுஞ்சாபத்திற்கிலக்கான தேவர்கள் தங்கள் செல்வமனைத்தையும் இழந்து நிற்கின்றனர். இங்கு செல்வம் எனக்கூறப்பட்டது பொருள் செல்வமன்றிக்கே வலிமை பொலிவு ஆகியவற்றையும் குறிக்கும். தன் திருவடி பற்றிய தேவர்களின் துயர் துடைக்க முன்வருகிருன். இவர்கள் இழந்த செல்வத்தினை மீட்டுக்கொடுக்க, அவன் உள்ளக்கருத்தின்படி அமிர்தம் தேவை. ஆழ்கடலைக் கடைந்தல்லவோ எடுக்க வேண்டும். அவ்வமுதத்தைத் தான் நினைத்தவளவிலே வரவழைத்துக்கொடுக்கவல்லவன் இன்று கடலைக் கடைய முறபடுகிருன. பெரிய மந்தர மலையை மத்தாகக் கொண்டான். வாசுகியென்னும் பெரிய பாம்பை கடை

கயிறாகச் சுற்றி தேவர்களையும் அசுரர்களையும் கொண்டு கடலைக் கடையச் செய்கிறான். மத்து கடலினுள் ஆழ்ந்துவிடாதிருக்கத் தானோர் ஆமை வடிவு கொண்டு தன் முதுகில் மத்தைத் தாங்கிக் கொள்கிறான். மிகக்க களைப்படைந்து தேவர்களும் அசுரர்களும் கடையமுடியாத நிலையில் யாரும் அறியாதவாறு ஓர் உருக்கொண்டு மத்தை அழுத்திப் பிடித்துக் கடைகிறான். திரண்டவமுதத்தினையும் எடுத்துக்கொடுக்கிறான். மேலும் தான் இவ்வளவு செய்திருக்க, "தேவர்கள் கடல் கடைந்து அமுதம் கொண்டார்கள்" என்னும் பெருமையையும் அவர்களடையுமாறு செய்தான்.

"விண்ணவரமுதுண்ணவமுதில் வரும் பெண்ணமுதுண்ட வெம் பெருமான்" (பெரியதிரு. 6-1-2) என்றவாறு பாற்கடலில் தோன்றி வாழும் இலக்குமி தேவியைத் தான் அடைந்திட வேண்டும் என்பதற்காகவே இவ்வளவு சிரமப்பட்டு கடைந்தான். "மா" என்பது அளவு, அழகு, இலக்குமி என்ப பொருள்படும். 'தவம்' என்பதோ ஒன்றை அடைவதற்குச் செய்யப்பெறும் கடுமையான சாதனையாகும். இலக்குமியை அடைய வேண்டுமென்று இவன் செய்த சாதனையும் 'மாதவம்' தானே. இவன் புரிந்திட்ட சாதனையால் உகப்புற்ற அவளும் பிறந்தகத்தையும் விடுத்து இவனது மார்பிலே ஏறி அமர்ந்து கொண்டாள். ஆகவே இவன் மாதவன் ஆனான். இவனது மார்பிலே அமர்ந்த அவள் மாதவி ஆனாள். கொம்பைச் சுற்றிப் படரும் கொடிபோல அவனது மார்பகத்தைப் பற்றிக் கொண்டமையால் இவள் மாதவிக்கொடியானாள். இவ்வாறு மாதவிக்கொடியான இலக்குமி தேவியின் அம்சமாய்த் தோன்றியவள் ஆண்டாள். "மாதவிக் கொடியின் ஓர் கொடி" என்ற பெருமை பெற்றாள்.

தாமரை மலரின் மணமும் நிறமும் தன்மையும் கொண்ட பெரிய பிராட்டியாரான இலக்குமி தேவியின் அம்சமான ஆண்டாள் இயல்பாகவே அழகுமிக்கவள். ஒப்பனை அழகு இவருக்குத் தேவையில்லை. ஆயினும் இவள் காதல்கொண்ட அவன் உகப்புக்காகத் தன்னை சிங்காரித்துக்கொண்டாள். "சூடும் பார் குழற்கோதை" எனப்படு பவள தன் குழலை செவ்வனே வாரியெடுத்து அழகாகக் கொண்டை போட்டுக் கொண்டாள். கண்ணில் பட்டாரைத் தன்பால் இழுத்திடும் "கயல்விழி"க்கு அஞ்சனமிட்டுக்கொண்டாள். பளிச்சிடும் பட்டாடைகள் அணிந்து கழுத்திலே கண்டசரம் மிமினுக்க, சூடகம் தோள்வளை பாடகம் எனப் பலப்பல பொன்னாபரணங்களைப் பூட்டிக்கொண்டாள். தகப்பனார் எம்பெருமானுக்காகக் குடலையில் கட்டி வைத்திருக்கும் செண்டுமாலை, குழல்மாலை, முடிமாலை, கிளிமாலை, தொங்கல் மாலை, உலாமாலை, வெற்றிமாலையெனப் பல வகையான மாலைகளையும் தக்கவாறு அணிந்து கொண்டாள். இன்ப ஒலி எழுப்பும் கை வளையல்கள் குலுங்கக் கண்ணாடி முன் நின்று தன்னழகைக் கண்ணுற்றாள். அப்பக்கமும் இப்பக்கமும் அசைந்தசைந்து பார்த்துத் தன் ஒப்பனை அழகு அவனுக்கும் உகப்பாக இருக்கும் என மன நிறைவு கொண்டாள். மேலும் தான் அவனுக்குத் தகுதியானவளே என்னும் திருப்தியும் கொண்டாள். பின்னர் நலுங்காது அம்மலர்மாலை



கள் அனைத்தையும் களைந்து குடலையில் வைத்துவிட்டாள். "வனமாலை மார்பன்" என மண மிக்க வனமாலையை அணிந்திருப்பவன் இவள் சூடிக்களைந்த மலர் மாலைகளை மிக்க மணமுடையதாய் மகிழ்வோடு சிரம் தாழ்த்தி ஏற்றுக்கொண்டான். இவ்வாறு இவள் சூடிக்களைந்த மாலைகளால் கட்டுண்டவன், இவள் திருநாவினின்றும் மலர்ந்த பாமாலைகளில் மனத்தைப் பறிகொடுத்தான்.

இராமாயணம் என்னும் காவியத்தைப் படைத்தவர் வான்மீகி முனிவர். இவர் 'உலக ஆதி முதற்கவி' எனப் போற்றப் பெறுகிருர். பூமிதேவியின் காதினின்றும் இவர் தோன்றியதால் இப்பெரும் புகழ் கிட்டியது. "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் இவையே முலையாவடிவமைந்த" (பெரிய திருமட்டல்) எனத் திருமங்கையாழ்வார் திருமாலிருஞ்சோலை மலையையும், திருவேங்கடமலையையும் பூமிப்பிராட்டியின் இருகொங்கைகளாக அனுபவிக்கிருர். "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்பன்" (திருப்பாவை) என ஆண்டாள் அனுபவித்தவாறு இவ்விரு மலைகளிலும் முறையே திருமாலிருஞ்சோலை அழகனும் திருவேங்கடமுடையானும் படுகாடு கிடக்கிருர்கள். இப்புவியிலே தோன்றிய புற்றுக்கள் யாவும பூமிப்பிராட்டியின் காதுகளாம். இப்புற்றினுள்ளிருந்து வெளிவந்தவர் வான்மீகியாகையால் இவர் உலக ஆதிமுதல் கவியாக விளங்குகிருர். பூமிப்பிராட்டியின் காதினின்றும் தோன்றியவர்க்கு இவ்வளவு ஏற்றம் என்ருல் பூமிப்பிராட்டியின் அம்சமாய்த் தோன்றிய ஆண்டாளின பாமாலைகள உலகு படைத்த அண்ணலாகிய அவனையும கட்டுண்டு கிடக்கச்செய்ததில் வியப்பில்லையே! கோதா ஸ்துதியில் வேதாந்த தேசிகரின் இனியவனுபவம் இது.

தாமச குணமிக்க உலகினருக்கு ஏற்படுவது உறக்கம். காலம் உணர்த்த உறக்கத்தினின்றும் விழிப்புறுவர். உணர்ந்தாலோ சிற்றின்ப கேளிக்கைகளை நாடி ஓடுவர். இது உலகின் இயல்பு. எம்பெருமானின் உறக்கமோ உலக ரக்ஷணச்சிந்தனை கொண்டு கிடப்பது. "காப்பாற்று, காப்பாற்று என்று அடியார்களின் ஆர்த்தத் தொனியே அவனை உறக்கத்தினின்றும் உணர்த்தும். உணர்ந்தாலோ அவர்கள் துயர் துடைத்து அவர்களோடு ஒன்றெனக் கலந்து நிற்பதே அவனுக்கு இன்பம். தானே அழகன் என்று சொல்லித் திரிவாரும் உறங்கும் நிலையில் அவர்கள் அழகு எங்கே போயிற்று எனத் தேடும்படியாயிருக்கும். எம்பெருமான் துயில் கொள்ளும் நிலையில் அவனது அழகு ஒளி விட்டுப் பிரகாசிக்கும். இராமாயணத்தில், இதனை நன்கு காண்கிரேம். சீதாப்பிராட்டியின் மடியில் தலை வைத்து இராமபிரான் தூங்குகிருர. அவ்வமயம் தீய கருத்தோடு இந்திரன் பிள்ளை காக்கை உருக்கொண்டு சீதாப்பிராட்டியின் திருமேனியைத் தீண்டுகிருன். "சுகமாய்க் கண்வளர்ந்தருளியவரும் அதனாலே அழகாயிருப்பவரும் தூங்கும் நிலையிலும் எதிராளிகளைத் தகிக்கச் செய்பவருமான இராமனை சீதாப்பிராட்டி எழுப்பினாள். ஆண்டாளும், கிருஷ்ணன் உறங்கும் போது ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் அழகையும் , துயிலெழும்போது வெளிப்படும் அழகையும் தானும் தன்னைச் சூழ்ந்துள்ளாரும் கண்டு களித்திட வேண்டி, "துயிலெழாய்" என அவனைத் துயிலுணர்த்துகிருள்.

"உலகளந்த உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்", "செற்ரூர்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்" (திருப்பாவை 17, 20) என அவனை எழுப்புகிருள். உம்பரகோமானே! எனக் கூப்பிட்டு, நீ உலகளந்தபோது, அஞ்ஞானவிருளிலே மூழ்கிக்கிடந்த அனைத்து சீவன்கள் தலையிலும் அவர்கள் கேளாதவளவிலும், உய்விக்கவல்ல உன் திருவடியை வைத்து ஆட்கொண்டாய். அவ்வாறு உலகரக்ஷகனான நீ இப்போது உறங்கலாகுமோ? எழுந்திராய என்கிருள். மேலும் உன் பால் அன்பிலலாது உன்படைபலத்தையே கூருத்திற்கொண்டு உனனிடம் யாசித்து வந்த துரியோதனனுக்கு படையைக் கொடுத்து, நீயே கதியென உன்னை அண்டியிருக்கும் அர்ச்சுனனுக்கு உன்னையே தந்தருளினாய். இதனால பாண்டவர்களின் கலக்கத்தையும் போக்கினாய். அடியாரகள காரியம் எனில பெருப் பேறெனக் கொண்டு தன்காரியம் போன்று செய்து உகப்புறும நீ உறங்கலாகுமோ? எழுந்திராய் என உணர்த்துகிருள்.

மேலும், "பொற்ருமரையடியே போற்றும் பொருள் கேளாய்" (திருப்பாவை 29) என உலகுக்கு உபதேசம் செய்த அவனுக்கே இன்று இவள் உபதேசம செய்கிருள். தன உந்தித் தாமரையில் தோன்றிய நான்முகனுக்கு

பிரதம குருவாக வேதத்தினை உபதேசித்தவனும் இவனே. கடலினடியில் கிடந்து பாசம் பிடித்து அழுக்கடைந்த இப்பூமியை வராஹரூபியாக மாரபோடணைத்து மேலே கொண்டு வந்த போது, "சரீரம் நல்ல நிலையிலிருக்கும் போது எவனொருவன் என்னை நினைக்கிருனோ, உடல் தளர்ந்து அந்திம காலத்தில் என்னை நினையாத போதிலும், அவனை நான் நினைந்திருந்து பிறப்பிறப்பில்லாது நித்திய கைங்கர்யம் செய்யவல்ல உயர்ந்த நிலைக்கு நானே அழைத்துச் செல்கிறேன்" என்று பூமிப்பிராட்டிக்கு உபதேசம் செய்தவனும் இவனே. இவ்வாறு உபதேசம் செய்த இவனுக்கே ஆண்டாள் உபதேசம் செய்கிருள்! பிறவிக்குப் பயந்து "உன் திருவடியே காப்பு" என்றிருக்கும் எங்கள் குடியிலன்ரு பிறந்தாய். மேலும் ஆசைப்பட்டன்ரு கால்நடை மேய்த்துத் திரிந்து பிழைக்கும் குடியில் தோன்றினாய். பசுக்களுக்கு நாங்கள் இல்லையாகில் வேறு ரக்ஷகர் உண்டு. உன்னைவிட்டால் எங்களுக்கு ரக்ஷகர் வேறு யார் உளர்? ஆகவே "எழுந்திராய்" என்று வந்த காரியம் மறந்து கிடப்பாரை எழுப்புவது போல் எழுப்புகிருள்.

ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய பிராட்டிமார்கள் மூவரும் அடியார்கள் உகப்புறு வண்ணம் அவர்களிட்ட திருநாமங்களையேற்றுக்கொண்டு எம்பெருமானைப் போன்றே அர்ச்சையாய்த் திவ்ய தேசங்களிலே கோயில் கொண்டிருக்கிருர்கள், திருவெள்ளறை என்னும் திவ்விய திருப்பதியிலே ஸ்ரீதேவி பங்கஜவல்லி என்னும் பெயருடன் முதன்மை வகிக்கிருள். நீளாதேவியாரோ திருநறையூர் என்னும் நாச்சியார்கோவிலில் நப்பின்னையாக அருளாட்சி செய்து கொண்டிருக்கிருள். ஸ்ரீவில்லிப்புத்தூரோ, பூமிப்பிராட்டியின அம்சமாயத் தோன்றிய ஆண்டாளாலே, "நாச்சியார் திருமாளிகை" எனப்போற்றப்பெறும் ஏற்றம் பெற்றது. ஆண்டாள் பெரிய பிராட்டியாரின் (இலக்குமி) அம்சமென்று முன்பு சொல்லி இங்குப் பூமிப்பிராட்டியின் அம்சமென்று கூறுவது சரியோவெனில் ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி ஆகிய பிராட்டிமார்களின் ரூபம் குணம் தன்மை ஆகிய அனைத்தும் இவளிடம் ஒருங்கே குடிகொண்டிருப்பதால் இவ்விதம் சொல்லலாம். திருநறையூரில் புறப்பாடு காணத் தாயார் முன்னே எழுந்தருளிச்செல்ல, பின்னே பெருமாள் எழுந்தருளிச்செல்வதைக் கண்டு பட்டரை இது காரணம் வினவ, "இது பெண்பிள்ளை ராஜ்யம் காணும்" என இனிமை ததும்பப் பதில் அளித்தாராம்.

"ஓம்" என்னும் பிரணவச் சொல்லில் அ, உ, ம என்னும் மூன்று அக்ஷரங்கள் அடங்கியிருக்கின்றன. 'அ' என்னும் அக்ஷரம் பரம்பொருளாம் நாராயணனைக் குறிக்கும். அகில உலகிற்கும் தாயான பிராட்டியைக் குறிக்கும் "உ" என்னும் அக்ஷரம். "ம" என்னும் அக்ஷரம் ஞானத்தைக் குறிப்பிட்டு அதற்கு உறைவிடமாகிய மக்களைக் காட்டிடும். இப்பிரணவம் போன்றே அனைத்து திவ்விய தேசங்களிலும் நாராயணன் அர்ச்சாரூபியாகவும் தாயான பிராட்டிமாரும் அர்ச்சையாய் எழுந்தருளியுள்ளார்கள். இவ்வழகு சேர்த்தியைக் கண்டு சேவித்துக் களித்திட மக்கள் அங்கே குழுமியிருக்கிருர்கள். நம் மனத்தை விட்டு அகலாதிருக்குமாறு பிரணவப் பொருளைப் படம் பிடித்துக்காட்டுவதுபோல் ஆகிறது. இவ்விதச் சிறப்பு எல்லா திவ்விய தேசங்களுக்கும் பொருந்துமேயாயினும் தனித்ததோர் ஏற்றம் ஆண்டாள் தோன்றிய ஸ்ரீவில்லிப்புத்தூருக்குண்டு. இங்கு பரந்தாமன் ரெங்கமன்னராக அர்ச்சையில் எழுந்தருளியிருக்கிறுன். வலப்புறம் பிராட்டியின் அம்சமான ஆண்டாளும் இடப்புறம் நித்திய சூரிகளிலே ஒருவனாம் கருடாழ்வாரும் அர்ச்சையில் எழுந்தருளியிருக்கிருர்கள். நின்ற திருக்கோலத்திலே சேவை சாதித்திடும் இச்சேர்த்தியழகு இத்திவ்ய தேசம் ஒன்றினுக்கே உரியது. எம்பெருமான் தானெடுத்த அவதாரங்களில் இராமனாயும் கிருஷ்ணனாயும் மானிட சாதியில் தோன்றியும் பின்னர் அர்ச்சையிலும் தோன்றுகிருர்கள். அது போன்று ஆண்டாளும் பிராட்டியாரின் அம்சமாய் மானிடருள் தானும் ஒருவனாய்த் தோன்றிப் பின்னர் அர்ச்சையிலும் தோன்றுகிருள். கருடாழ்வாரின் அம்சமாய் பெரியாழ்வார் மானிடராய்த் தோன்றி அர்ச்சையிலும் தோன்றுகிருர்.

யானை மீதேறி, வல்லப பாண்டியன் வித்வான்கள் ஆகியோர் புடைசூழ நகர்வலம் வரும் பெரியாழ்வாரின் விழாக் கோலத்தைக் காண நாராயணன் பிராட்டிமார்கள் சகிதம் கருடாரூடனாய் ஆகாயத்தே தோன்றினான். இவ்வரிய சேர்த்தியழகைக் கண்டு சேவித்திட தேவர் குழாம் வானிலே குழுமி நிற்கின்றனர். இவ்வாறுன தன் ரங்கமன்னார் ஆண்டாள் பெரியாழ்வார்

ன்னும் சேர்த்தியழகை உல
த்தோர் அனைவரும் கண்டு
ளித்திட வேண்டும் எனத் திரு
ள்ளம் கொண்டான் போலும்!
பெரியாழ்வாரோ பெருமாளும்
ிராட்டியுமான இச்சேர்த்திய
கிற்கு என்ன இடையூறு ஏற்
டுமோவென அச்சங்கொண்டு
ல்லாண்டு பாடிக்கொண்டி
க்கிறார். இப்படிப்பட்டவர்
ருக்காலும் தன் விருப்பத்திற்கு
டன்படார் என்று அவர்
தான்றுவதற்குக் காரணமான
ருடாழ்வாரையே தன் பக்கத்
ில் நிறுத்திக்கொண்டான்.

எந்தச் சுபகாரியத்திற்கும்
ிலககப்பட்ட தென்திசை ஒரு
பரும் பாக்யம் செய்துள்ளது.
ிருவரங்கத்திலே பள்ளி கொண
ருக்கும் பெரிய பெருமாளான
ரங்கனும்,

"குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசைபின்பு காட்டித் தென்திசை
இலங்கை நோக்கி"
(திருமாலை 19)

எனத் தென்திசை நோககிப் பள்ளி கொண்டிருக்கிறான்.

இவ்வாறு அரங்கன தென் திசை நோக்கிக்கிடப்பது தன் பிரிய நாயகியாம் ஆணடாள் தோன்றிய ஊரையும் அவள கோயில் கொண்டிருக்கும் அழகையும் கண்டுகளித்துககொண டிருககிறான் என்பது வேதாந்த தேசிகரின் இனிய அனுபவம்.

என்ன வருமோவென அசசங் கொண்டு பல்லாண்டு பாடிக காப்பிடும் தனமைய ரான பெரியாழவாரோ அரங்கன் தன பெண்ணையே பார்த் துககொணடிருககிறான் என்றால தன எச்சிற கணணே பட்டு விடும் என்று அருசி,

"மன்னுடை விபீடணர்க்காக
மதிளிலங்கைத் திசைநோக்கி
மலர்கண்வைத்த என்னுடைய
திருவரங்கர்" (பெரியா.திரு. 4-9-2)

என்று அடியானாகிய விபீடண ருக்காக அவன் வாழும் மதில்கள சூழ்ந்த இலங்கை இருக்கும் தெற்குத் திசையை நோக்கிக் கொண்டிருககிறார் என்று அருளிச்செய்தார் போலும்!



## 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களுக்கு வசதிகள்

* 'க்யூ' கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களின் காத்திருக்கும் நேரத்தை கணிசமாகக் குறைக்கும் வகையில், தினசரி சேவை நேரங்களில் பல மாற்றங்களை தி.தி தேவஸ்தானம் செய்துள்ளது. அதே சமயத்தில் கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களுக்கு வெகுநேரம் காத்திருக்குபடியான ஒரு களைப்பு சூழ்நிலையை நீக்கும் வகையில் கீழ்வரும் வசதிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.
* மிகவும் விசாலமான சுகாதாரமான, காற்றோட்டமான பெரிய கொட்டகைகளில் மின் விசிறிகள் பொருத்தப்பட்டுள்ளன.
* காஃபிபோர்டு நிறுவனத்தாரால் உள்ளே உணவு வகைகள் விற்பனை.
* நியாயமான விலையில் உணவுப் பொட்டலங்கள் விற்பனை.
* ஆந்திரமாநில பால்வள நிறுவனத்தாரின் சுத்தமான பால்விற்பனை.
* தி.தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட தெய்வ வண்ண உருவப்படங்கள், மற்றும் நூல் வெளியீடுகள் விற்பனை.
* 'க்யூ' வரிசைகளிலும் மறைப்பிட வசதிகள்.
* வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் ஒலிபரப்பப்படும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்.
* பக்தி நிகழ்ச்சிகள், இசை போன்றன ஒலிபரப்பப்படல்.
* 'க்யூ' கொட்டகைகளின் வாயில் அருகேயே 'காலணிகளை' வைப்பதற்கான வசதிகள்.
* தலாளிகள் மற்றும் ஏமாற்றுப் பேர்வழிகளின் தவறான வழிகளைத் தடுப்பதற்கும், புகார்களை ஏற்று உதவி செய்யவும் கோயில் வாயிலருகே (முகத்துவாரம்) அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருத்தல்.
* 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களின் தேவைகளையும், வசதிகளையும் கவனிக்க அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருத்தல்.

# சித்திரக் கவியில் பக்திப்பாடல்கள்

திரு. புலவர் மணி - வேலூர்.

### முகவுரை :

எந்த மொழி நூலாக இருப்பினும் பலரும் படித்துப் பாராட்ட வேண்டுமென்றால் அந்நூலில் உள்ள பாடல்களில் உவமை, உருவகம் முதலிய பலவகை அணிகள் இடம் பெற்றிருத்தல் அவசியம். மக்கள் ஆடை, அணிகலன்களையணிந்து தங்களை அழகுபடுத்திக் கொள்ளும்போது அவ்வாடை அணிகலன்கள் தமக்கும், காண்பவர்க்கும் கண்ணையும் கருத்தையும் கவர்வதைப் போலவே பல அணிகலன்களைப் புனைந்து புலவர்கள் இயற்றும் பாடல்கள் உடைய நூல்களும், படிக்கும் மக்களை அந்நூலை மீண்டும் மீண்டும் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தை ஏற்படுத்துவதை அறிய லாம். கம்பராமாயணம், தேவாரம், திருவாசகம் மகாபாரதம் முதலிய பக்தி நூல்களில் அணிகள் மிகுந்திருப்பதால் அதை அனைவரும் விரும்பிப் படித்து வருகிறூர்கள். வடமொழிப் புலவர்களான வால்மீகி முனிவர், வியாசர் முதலியவர்களும் தத்தம் நூல்களை பல அணிகளைக் கொண்டே பாடியுள்ளனர். தமிழில் இலக்கண நூல் இயற்றிய தொல்காப்பியர் காலத்திற்கு முன் பிருந்தே அணிகளோடு பாடல்களை இயற்றும் வழக்கம் இருந்தது என்பதை பழம்பெரும் நூலான பரிபாடல் திருமுருகாற்றுப்படை முதலிய நூல்களிலிருந்து தெரிகிறது. சுமார் 3 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தொல்காப்பியர் இயற்றிய "தொல்காப்பியம்" என்ற இலக்கண நூலில் உவமை, உருவகம் முதலிய அணிகளுக்கு அணியிலக்கணம் என்ற தலைப்பில் இலக்கணம் வகுத்துள்ளார். தொல்காப்பியத்தைப் பின்பற்றித் தண்டி என்பவர் தமிழில் "தண்டியலங்காரம்" என்ற இலக்கண நூலை இயற்றினார். இந்நூலில் பிற்காலத்திற்கு ஏற்ப 35 வகையான அணிகளை தண்டி என்பவர் விளக்கிப் பாடி அனைவருடைய பாராட்டையும் பெற்றூர். இவர் சொல்லணியியலில் மடக்கணி வாயிலாகப் பல பக்திப் பாடல்களைச் சித்திரக் கவியில் பாடிப் படிப்பவர்களுக்குப் பக்திச் சுவையையூட்டுவதுடன் பாடல்களைப் பலமுறைப் படிக்க வேண்டுமென்ற ஆர்வத்தையும் ஊட்டியிருக்கிறூர். தண்டி என்பவர் தன் தண்டியலங்கார நூலில் உள்ள சில சித்திரக் கவியில் பாடியுள்ள சில பக்திப்பாடல்களை இனிக் காண்போம்.

### மாலை மாற்று

மாலை மாற்று என்ற சித்திரக் கவியாவது ஒரு பாடலை முதல் எழுத்திலிருந்து படித்தாலும் இறுதி எழுத்திலிருந்து படித்தாலும் அதே எழுத்தும் சொல்லும் வந்து ஒரே பொருளைத் தருவதைக் காணலாம். அப்பாடலாவது:

"வாயாயா நீகாவா யாதாமா
தாமாதா
யாவாகா நீயாயா வா"

'திருமாலே! எங்களுக்குக் கிடைக்காதன யாவை? நீ எங்களுக்கு அருள் புரிவாயாக! இவள் மிக்க



வருத்தமாவது ஏன்? யாவை நினைக்கத்தகாதன ஆய்பனே! நீ வருவாயாக!' என்பது இப்பாடலின் கருத்தாகும்.

ஒரு மாலையை எப்படித் திருப்பி அணிந்தாலும் அணிபவருக்கு அழகைத் தருவது போலவே இப்பாடலைத் திருப்பிப் படித்தாலும் ஒரே பொருளைத் தருவதையறியலாம்.

நாகம் 1. நாகம் 2.

## நான்காரைச் சக்கரம்

நான்காரைச் சக்கரம் என்பது நான்கு ஆரக்கால்களை யுடைய சக்கரம் எனப்பொருள் படும். இச்சக்கரத்தின் நடுவினுள் "மே" என்ற எழுத்து பொதுவாக நின்று, ஆரக்கால்கள் நான்கிற்கும் நான்கு எழுத்துக்கள் வந்தும், வட்டத்தின் மேல் பன்னிரெண்டு எழுத்துக்கள் வந்து சக்கர வடிவில் இப்பாடல் அமைந்துள்ளதைக் காண்க.

பாடலாவது:

மேரு சாபமு மேவுமே
மேவு மேயுண வாலமே
மேல வாமவ னாயமே
மேய னானடி சாருமே.

இப்பாடலின் பொருளாவது: "மேரு மலையை வில்லாகக் கொண்டவரும், நஞ்சை உணவாகக் கொண்டவரும், உயர்ந்த உருவத்தையும் உடையவருமான சிவபெருமான் விளையாடுதற்கினமாயுள்ள கூளியேயாகலான் அத்தன்மையுடையவருடைய நல்லடிகளை வண்ணங்கிச் சிவபதம் சேர்வோமாக!"




மேற்கண்ட பாடலை நான்கு ஆரக்கால்களையுடைய சக்கரத்தில் பொருத்திப்பாட இப்பாடல் ஒரு அழகிய சித்திரக் கவியாலமைந்த பக்திப்பாடலானதை அறியலாம்.

## இரட்டை நாகபந்தம்

இரட்டை நாகபந்தம் என்பது இரண்டு பாம்புகள் தம்முள் இணையும்படியாகச் சித்திரமெழுதி அதில் முதல் பாம்பின்

தலைமுதல வால் வரை ஒரு நேரிசை வெணபா பாடலும, இரணடாம பாமபின தலை முதல வால வரை ஒரு இன னிசை வெணபாப பாடலும எழுதி இரணடு பாம்புகளும சந திக்குமிடங்களில் இருபாடலக ளுக்கும் பொதுவான மெய் எழுத்துககளை அமைததுப்பா டல் இயறறுவது இரட்டை நாக பந்தம் எனப்படும்.

### நாகம் ஒன்றிலமைந்த பாடல்

அருளின் றிருவுருவே யம்பலத்தா
யும்பர்
தெருளின் மருவாருசீர்ச்
சீரே-பொருவிலா
வொன்றே யுமையா ளுடனே
யுறுதி தரு
குன்றே தெருள வருள்

இப்பாடலின் பொருளாவது: "அறத்தினது அழகிய மேனி யையுடைய சிவபெருமானே! திருச்சிற்றம்பலத்தில் கோயில் கொண்டிருப்பவனே! தேவர்கள், அறிவுக்கும் எட்டாதவனே! அழ கிய புகழையுடையவனே! குற்ற மில்லாத ஏக ரூபத்தையுடை யவனே! உமையம்மையோடு பொருந்தி மலை போன்ற தோற் றமுடையவனே! நாங்கள் தெளிய அருளை அருள்வா யாக"

### நாகம் இரண்டிலமைந்த பாடல்

மருவி னவருளத்தே
வாழ்சுடரே நஞ்சு
பெரு கொளியான் றேயபெருஞ் சோதி-
திருநிலா
வானஞ் சுருங்க மிகுசுடரே சித்த
மயரு மனவை யொழி

இப்பாடலின் பொருளாவது: "அடைந்தவருள்ளத்தே கெடாத விளக்கமாயுள்ள சிவபெருமானே! நஞசுணடதால அநநஞ் சின் நிறததைப் பெற்ற கழுத் தைப் பெற்று பெரிய சோதி யாக விளங்குபவனே! அழ கிய சநதிரனையுடைய ஆகாய மானது சிறுகப பெருகிய ஒளி யையே உன திருமேனியாக உடையவனே! எனதுளளம் எப் போதும் நினது அடியை மறக் குமெல்லையை ஒழிப்பாயாக.

மேற்கண்ட பாடல்கள் இரண் டும் நாகவுருவததில் பந்திக்கப் பட்டிருத்தலால் "நாகபந்தம்' எனப்பெயர் பெற்றது.

### சுழிகுளம்

சுழிகுளச் சித்திரக்கவி எனப் படுவது குளங்களில் நீர்ச்சுழி யானது கீழும், மேலும் சுற்றி வருவது போலவே பாடல் எழுத் துக்களும் மேலிருந்து கீழாகவும் கீழிருந்து மேலாகவும் சென்று நடுவில் பாடல் முடிவதால் இவ் வகையிலமைந்த பாடலுக்கும் சுழிகுளம் எனப்பெயர் ஏற் பட்டதெனலாம். - இவ்வகையி லமைந்த பாடலில் ஒவ்வொரு வரியிலும் எட்டு எழுத்துக்கள் வீதம் நான்கு வரிகள் இருக் கும. நேர் நேராகப் படித்தாலும் பாடல் வரும்.

கவிமுதி யார் பாவே
விலையரு மா நற்பா
முயல்வ துறு நர்
திருவ ழிந்து மாயா!

இப்பாடலின் பொருளாவது: இறைவனருள்பெற்ற கவிஞர்கள் தங்கள் அறிவின் முதிர்ச் சியால் எழுதும் கவிதைகள் விலை மதிக்கமுடியாத கவிக ளாகளாக விளங்குவன ஆகும். மேலும் இடைவிடாத முயற்சி யுடையவரது செல்வமாக என் றும் அழியாத தன்மையுடை



யதாய் விளங்கும் என்பதாகும்.

### சருப்பதோ பத்திரம்

பண்டைக்காலத்தில் அரசர்களின் மாளிகைகளில் உள்ள கட்டிடங்களுக்குச் சருப்பதோ பத்திரம் என்று பெயராகும். அந்தக் கட்டிடம் நாற்புறமும் வாயிலுள்ளதாகவும், நினைத்த பக்கத்தில் மேலே ஏறவும், கீழே இறங்கவும் வாயில் கொண்டிருக்கும். இச்சித்திரக் கவியும் நாற்புறமும் தலைப்பாக வைத்து வரிசையாகப் படிக்கவும், மடக்கிப் படிக்கவும், கீழிருந்து மேலாகவும், மேலிருந்து கீழாகவும் எப்படிப் படித்தாலும் அப்பாடலின் உருவம் கெடாமல் இருப்பதால் இவ்வகைப் பாடல் சருப்பதோ பத்திரம் எனப்பெயர் பெற்றது.

மாவா நீதா தாநீ வாமா
வாயா வாமே மேவா யாவா
நீவா ராமா மாரா வாநீ
தாமே மாரா ராமா மேதா!!

இப்பாடலின் பொருளாவது: "பெரியோனே! நீதியையுடைய இறைவனே! மிக்க நீங்காத செல்வத்தையுடையவனே! என்னாகக் கடவது. என்னை நீ பொருந்துவாயாக! இவ்வாறாக என்னை நீ சேர்ந்தால் எனக்குக் கிடைக்காதன யாவை? நீ வருவாயாக! இராமபிரானை ஒப்பாய். காமதேவனுமாகவுள்ளாய், மழையையும் ஒப்பாய், நீ பெரிய மேம்பாட்டுடைய நின் மார்பினில் அணிந்துள்ள மலர் மாலையை எனக்குத் தந்து அருள் புரிவாயாக" என்பதாம்.

### முடிவுரை

இத்தகுச் சித்திரக்கவிகள் மிகவும் சிறப்படையவனாக அன்னவராலும் போற்றப்படுகின்றன. சித்திரக்கவியிலமைந்த பகதிப்பாடல்களைச் சிறுவர் முதல பெரியோர் வரை படித்துப் பாராட்டும் வகையில் அமைந்துள்ளன. இவ்வகைப் பாடல்கள் நம் அறிவின் சிந்தனையைத் தூண்டிப் படிப்பதற்கு ஆர்வத்தையூட்டுகின்றன. மேலும் இவ்வகைச் சித்திரக் கவிகள் இறைவனை நாம் எப்போதும் நினைவு கூரவும், இறைவனை வணங்கி நற்பேறுகள் பல பெறவும் நமக்கு உறுதுணையாக விளங்குகின்றன அல்லவா!! இன்பம் பயக்கும் இத்தகுப் பாடல்களைப் படித்துப் பயன்பெறுவோமாக.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |

## நானும் விருந்தினன்தான்!

போலந்து நாட்டுத் துறவி 'ஹோபட்ஸ் கெய்ம்'மைக் காண வெளிநாட்டு அன்பர் ஒருவர் வந்தார். துறவி அவரைத் தம் அறைக்குள் வரவேற்றார். துறவியின் அறைக்குள் ஒரு கயிற்றுக் கட்டில், சில நூல்கள், ஒரு நாற்காலி, மேசை இவ்வளவே இருந்தன.

இதைக் கண்டு வந்த அன்பர் ஆச்சர்யமுற்றார்.

'துறவி அவர்களே, உங்களிடம் அதிகம் பொருள்களே கிடையாதா?' என்று கேட்டார்.

அதற்குத் துறவி 'உங்களிடமும்தான் பொருள்கள் இல்லை' என்று கூறினார்.

வந்த அன்பர் பதிலால் வியப்படைந்து 'நான் இந்நாட்டிற்கு விருந்தினனாக வந்துள்ளேன். கொஞ்ச காலமே இங்கு இருக்கப் போகிறேன். எனக்கு எதற்குப் பொருள்கள்?' என்றார்.

அதற்குத் துறவி தந்து மறுமொழி எவ்வளவு பொருள் வாய்ந்தது தெரியுமா?

'அன்பரே! நானும் இந்த உலகில் விருந்தினனாகத்தான் வந்திருக்கிறேன்.'

—கவிமாமணி மதிவண்ணன்

# ரெங்கதீர்த்தப் பெருமாள் கோயில்

திரு. எஸ்.எஸ். மணியம் - ஸ்ரீவில்லிபுத்தூர்

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி, நாச்சியார் என்ற ஆண்டாள் அவதரிதத ஸ்ரீவில்லிபுத்தூரில் உள்ள பழமையான கோயிலகளில் "ரெங்கர் கோயில்" என்றழைக்கப்படும் ரெங்க தீரத்தப்பெருமாள் கோயிலும் ஒன்ருகும். அதி அற்புதமான இயற்கைக்காட்சிகள் நிறைந்த மேற்குத்தொடர்ச்சி மலை அடிவாரத்து மேய்ச்சல் நிலப்பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளது.



ஸ்ரீரெங்கம் அரங்கநாதரே இங்கு எழுந்தருளி கோயில் கொண்டுள்ளதாக இங்குள்ளோர் நம்புகிருர்கள். பழங்காலத்தில் வணிகம் செய்யும் வியாபாரிகள், தங்களுடைய வியாபாரம் தடைஇன்றிச் செழித்து வளர வேண்டுமென்று, இங்கே வந்து பூசை செய்துவிட்டு, புதுக்கணக்குகளை எழுதுவார்களாம். இயற்கை அழகை ரசித்து மகிழும் சுற்றுலா விரும்பிகள், தமிழ்ப் புதுவருடப் பிறப்பன்றும், தமிழ்மாதத்திய கடைசி சனிக்கிழமைதோறும் இங்கே வருகை தருகிருர்கள்.

ஸ்ரீவில்லிப்புத்தூர் - மதுரை நெடுஞ்சாலையில் அமையப்பெற்ற, ஆண்டாள் கூட்டுறவு நூற்பு ஆலை அருகே மேலத்தொட்டி பட்டி கிராமத்திலிருந்து 5 கி.மீ. தூரத்தில் இக்கோயில் உள்ளது. நல்ல ரோடு வசதி. பஸ், கார், வேன்கள் முதலியன கோயில் வாசல் வரை செல்லும்.

கோயிலின் மேற்கில் வானுயர்ந்த மேற்குத்தொடர்ச்சி மலைத்தொடர்கள், கிழக்கில் தனியாருக்குச்சொந்தமான புன்செய் நிலத் தோட்டங்கள். அவைகளில் சில மின் இணைப்பு செய்த "பம்பு" வசதியுடன் விவசாயம். கட்டம் போட்டு நெய்த கைத்தறிக் கைலி போல் வயல் வெளிகள் பச்சைப்பசேலென்று காணக்கிடக்கின்றன. கோயிலின் தென்புறத்தில் அரசு பழ உற்பத்தித்தோட்டம் பெரிய அளவு உள்ளது. வடக்கு திசையில் தீர்த்தம் வழிந்தோடும் சிற்றருவிக்குச் செல்லும் ஒற்றையடிப் பாதை உள்ளது.

கோயிலில் ஸ்ரீஅரங்கநாதர் ஸ்ரீதேவி பூதேவியுடன் இருக்கிருர். வலப்பக்கம் ஸ்ரீதேவியும், இடப்பக்கம் பூதேவியும், நடுவில் சங்கு சக்கரதாரியாக கல்யாண கோலத்தில் மூன்றரை அடி உயரத்தில் கிழக்கு நோக்கி இருக்கிருர்.

அர்த்த மண்டபத்தில் ஸ்ரீராமானுசரும், சேனைமுதல்வரும், நம்மாழ்வாரும் காட்சி தருகின்றனர். வெளிவாசலில் பெருமாளை நோக்கியவாறு, தனிச்சன்னதியில் கருடாழ்வார் நின்று கொண்டிருக்கிருர். சேவிக்க வரும் பக்தர்களுக்காக கோயில் வாசல் கிணற்றில், எந்தக்காலங்களிலும் தண்ணீர் குறையாமல் சுவை நிறைந்து 5 அடி ஆழத்திலேயே இருக்கிறது.

நாச்சியார் ஆண்டாள் கோயிலின் உபகோயிலாகும் இக்கோயில். சுமார் 100 ஆண்டுகளுக்குப் பிறகு சென்ற ஆண்டு பூரண கும்ப மரியாதையுடன் கும்பாபிசேகம் நடைபெற்றது. ராஜபாளையம் பூசப்பாடி ராஜா

# A HEALING TOUCH

## T. T. DEVASTHANAMS INTRODUCES
## SRI BALAJI AROGYAVARAPRASADINI SCHEME

For ages Tirumala the abode of Lord Venkateswara has been a great centre of pilgrimage Thousands of devotees visit the sacred hills every day and offer their solemn prayers to the Lord for their spiritual and physical well-being

Alleviating human suffering has been a part of dedicated efforts of TTD to the mankind TTD already manages a Leprosorium, centre for physically handicapped a poor home and also a central hospital. To provide the most advanced medical technology to the needy the TTD has launched another monument a blessing from the Lord by opening Sri Venkateswara Institute of Medical Sciences -- a sophisticated superspeciality centre on the lines of AIIMS of New Delhi & JIPMER of Pondicherry, and PGI of Chandigarh Total well being of man is the aim of Sri Venkateswara Institute of Medical Sciences, which apart from offering service, training and education in medical sciences also encourages Research and development

The doors to such a state of the art technology should be open to our poor and disabled brethren

With a view to achieving this, Sri Venkateswara Institute of Medical Sciences has introduced a New scheme Balaji Arogyavaraprasadini Scheme To accomplish the goal of proving the sophisticated medical technology to every individual at an affordable rate, we invite the generous co-operation of philanthropists and the general public

### The Scheme in essence:

A donor can make an endowment of Rs 1000/- or multiples thereof / Rs 1 lakh / Rs 5 lakhs / Rs 10 lakhs to T T Devasthanams which will in turn contribute matching grant The entire amount will be deposited in fixed deposit in a nationalised Bank and the interest accrued on it will be utilised for providing free medical services to the poor and the needy

A Chair in Sri Venkateswara Institute of Medical Sciences will be named after the donor who contributes Rs 10 lakhs or above. These endowment chairs are purely research oriented

* Donations can be made by any individual / family / company / firms etc
* The name of the donor who endows Rs 5 lakhs or more will be displayed prominently in the Reception hall of the hospital.
* The discharge ticket of the benefited patient will carry the name of the donor

### Additional Benefit and facilities :

* Donations to Sri balaji Arogyavaraprasadini Scheme are exempted from Income Tax under 80 (G)
* Paid rooms / Air conditioned rooms will be allotted to family members of the donor in the hospital
* Paid rooms can be named after donors who contribute a sum of Rs 5 lakhs or above
* By paying Rs 5 lakhs and above, a donor may sponsor one operation per year
* Donors can sponsor feeding of the In-patients and out-patients They may also sponsor a travel fellowship for the faculty per year

All donations, by D Ds drawn in favour of The Executive Officer, T T Devasthanams, Tirupati-517 501 (Andhra Pradesh) should reach the Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati along with the following particulars

* Name and address along with the latest passport-size photographs of the family members of the donor who contributes Rs. 1 lakh or more
* Name and address of the person to whom Income Tax Exemption Certificate is to be issued

The donors are also welcome to offer equipment, vehicles etc to SVIMS or even sponsor health camps in rural areas, if they so desire Further details can be had from

**The Executive Officer**
**T.T. Devasthanams, Tirupati**
**or**
**The Director**
**Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati**

**EXECUTIVE OFFICER**

THE SERENE AND SUBLIME TEMPLE OF
SRI KALYANA VENKATESWARA AT MANGAPURAM
(6 miles North-West to Tirupati)



TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

# Sri Venkateswara Vanabhivriddhi Scheme

## An Appeal . . .

[illegible]
[illegible]
[illegible]

Sacred Forests of Tirumala are the great gift of Lord Venkateswara to mankind. With a view to safeguarding its unique yet delicate ecological condition, Tirumala Tirupati Devasthanams have introduced a series of exciting schemes called Sri Venkateswara Vanabhivriddhi Schemes. The Schemes seek to provide a rare opportunity to the public for participation in a massive plantation project implemented by the Forest Department of T.T. Devasthanams.

The salient features of Sri Venkateswara Vanabhivriddhi Schemes are:

**VRIKSHA SAMVARDHANAM :** Under this Scheme, about one acre of land will be brought under plantation.

**Benefits :**

- Plantation will be named after the donor or person of his choice.
- Every year free accommodation on 2 ordinary days at Tirumala for 10 years.
- One paid special darshan every year for 5 persons for 10 years.

**Donation :** Rs. 15,000.

**VRIKSHA PRASADAM :** The Scheme is proposed for raising 100 fruit and flowering seedling every year.

**Benefits :**

- Distribution of one hundred seedlings, both fruit bearing and flowering in the donor's name every year.
- Two days free stay at Tirumala every year on any ordinary days for 10 years.
- One paid special darshan every year for five persons for 10 years.

**Donation :** Rs. 10,000.

**SMARAKA VANALU :** Under this scheme 10 saplings of selected species will be planted in a grove and maintained for five years.

**Benefits :**

- The grove will be named after the donor.
- Every year paid special darsnan for five persons for five years.

**Donation :** Rs. 2,000.

**VANA SAMRAKSHANA BHAGA SWAMYAM :** is proposed to protect and improve the natural forest cover on Tirumala hills.

**Benefits :**

- Display of the donor's name.
- Paid special darshan for five persons for one year.

**Donation :** Rs. 1,000.

**ADHYAYANA VANALU :** Plantation and maintenance of a variety of species will be taken up under this scheme in the proposed botonical garden at Tirumala.

**Benefits :**

- Display of donor's name near the plant.

**Donation :** Rs. 500.

**VRIKSHA DATTATA :** is a bold scheme featuring adoption and plantation of avenue trees on the ghat road and at Tirumala.

**Benefits :**

- Display of donor's name.

**Donation :** Rs. 250.

We appeal to all devotees to donate liberally and help us to preserve the priceless forest wealth of Tirmala - The Abode of LORD VENKATESWARA.

Please send your donations by Demand draft to the **The Executive Officer, T. T. Devasthanams, TIRUPATI - 517 507.**

**EXECUTIVE OFFICER**

தாயாதியர் லோகநாத ராஜா பூரண நிதி உதவியுடன் இது பெரிய கோயிலாக நிர் மாணிக்கப்பட்டு புதிய பொலிவு டன், மக்கள் தங்கும் வசதியுடன் கட்டி இருக்கிறார்கள்.

கண்ணுவ முனிவரின் சீடர் அரங்கமுனிவர், தவம் செய்து முக்தி அடைந்த மலை அரங்க பர்வதம். இம்மலை சுமார் 1800 அடி உயரம். இம்மலையே இத் தலத்திற்குப் பெயராக அமைந் துள்ளது. தீர்த்தம் வழிந்தோ டும் அருவி இம்மலை அடிவாரத் தில் அமைந்துள்ளது. அடர்த் தியாக குடை பிடித்து வளர்ந்து நிழல் தரும் ஆல விருக்ஷ மரங்களின் கூட்டத்து நடுவில் மலையிலிருந்து தீர்த்தம் நூபுர கெங்கை வழியாய் வழிகி றது. மழைக்காலத்தில் தீர்த் தம் வழிவது அதிகமாகவோ, மழை இல்லாத வறட்சியான காலத்தில் தீர்த்தம் குறைவா கவோ இல்லை! எந்த நேரத்தி லும் எந்தக்காலங்களிலும் ஒரே சீராக இந்தத் தீர்த்தம் வழிந்து கொண்டிருக்கிறது! இந்த அரு வித் தண்ணீரை சேமிக்க பெரிய தொரு தொட்டியும் கட்டியுள்ள னர். பழமைப் பொலிவு மாறா மல் காணப்படுகிறது.

மாயமாய் வரும் இதுபோன்ற தீர்த்தங்கள் தென்தமிழகத்தில் மூன்று இடங்களாகும். ஸ்ரீவில் லிப்புத்தூர் காட்டழகர் என்ற அழகர்கோயில் அடிவாரத்தி லும், மதுரையில் அழ கர்கோயில் பழமுதிர்ச்சோலை மலைக்கோயில் மலைமேலிலும் காணப்படுகிறது.

ரெங்கதீர்த்தப்பெருமாள்

கோயில் தீர்த்தமான இது, மற் றைய இரண்டு தீர்த்தங்களைவிட சற்றுக்குறைவாக நீர் கொண் டுள்ளது. இத்தீர்த்தத்தில் நீரா டுவதற்குக் கோயிலின் வடக்கு திசை நோக்கிச்செல்லும் ஒற் றையடிப்பாதை வழியாய் 2 கி.மீ. தூரம் நடந்து செல் லவேண்டும். நாணற்புல்செடிக ளும், எட்டத்தில் மலை வளர் மூலிகைச் செடிகளும் வளர்ந்தி ருக்கின்றன. ஆனாலும் நாம் நடந்து போகும் பொழுது எந்த உபத்திரவமும் ஏற்படுவதில்லை. மலை அடிவாரப்பயணம் என் பதால், ஓங்கி வளர்ந்த அழ கிய மலைக்காட்சியும், மலை மேல் தவழுகின்ற வெண்மே கக்கூட்டங்களும் நம்மைக் கிரக் கம் கொள்ளச்செய்கிறது. நீரா டிவிட்டு வன போஜனம் அருந் துவதற்கென்றே சிலர் இங்கே கோஷ்டியாக வருவதுண்டு.

தீர்த்தத்தொட்டியின் வெளிச் சுற்றில் இரண்டு அடி உயரத் தில் சிலை வடிவில் ஆஞ்ச நேயப்பெருமாள், தன் வாலைக் குடையாகப் பிடித்து நின்று அருள் தருகிறார். நாம நீராடி விட்டு அவரை மனம் குளிர தரிசிக்கலாம்.

புரட்டாசி, ஐப்பசி மழைக காலங்களில் இந்த மலையிற் பெய்கின்ற மழைநீர் ஆறாகப் பெருகி, ரெங்க தீர்த்தப்பெரு மாள்கோயில் அருகில் பாய்ந்து வருகிறது. தவழ்ந்தும், குறுகி யும், விரிந்தும் வருகின்ற இந்த ரெங்கர் கோயில் ஓடைத்தண் ணீர், ஒரு இடத்தில் நீண்ட விசாலமான ஓடையாக வருகி றது. தண்ணீர் இருகரைகளை யும், நிமிரத் தொட்டுக்கொண்டு வெள்ளமெனச் சீறிப்பாய்ந்தோடு கிறது. அப்பொழுது அது அகண்ட காவிரியை நமக்கு நினைவூட்டுகிறது.

## நித்ய அபிஷேக ஸேவை

யாத்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ் தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண் டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசிய மயமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம் திருப்பதி" என்ற பெயரில் ரூ 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப் பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித் தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும் பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில் ஸ்ரீகபி லேஸ்வரசுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலை யிலிலும், மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகின்றது.

(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதி தாஸன் - காஞ்சிபுரம்.

## துவயம்

**1) துவயம் (த்வயம்) என்றால் என்ன?**

விஷ்ணு லோகத்தில் பெருமான் பிராட்டியாருக்கு உபதேசித்த இரண்டு வாக்கியங்கள் துவயம் எனப்படும்.

**2) இரண்டு வாக்கியங்கள் யாவை?**

"ஸ்ரீமந் நாராயண சரணெள
சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்பன இரண்டு வாக்கியங்களாகும். இம்மந்திரம் தலை சிறந்த இரண்டு பொருள்களை அறிவிக்கின்றது.



**3) திருமந்திரத்தை அடுத்து துவயத்தை விளக்குவானேன்?**

"ஓம் நம: நாராயணாய" என்பது திருமந்திரம். இதில் நமப் பதம் உபாயத்தைக் குறிக்கிறது. 'நாராயணாய' என்னும் பதம் உபேயத்தைக் குறிக்கிறது. நமப்பதத்தின் பொருளை துவயம் விரிக்கிறது. 'நாராயணாய' என்னும் பதத்தின் பொருளைச் சரம சுலோகம் விரிக்கிறது. இவ்வாறு விளக்கம் சொல்வர் ஒரு சாரார்!

இம்முறையைப் பின்பற்றியே முமுட்சுப்படி என்னும் இந்நூலில் பிள்ளையுலகாசிரியர் திருமந்திர விளக்கத்திற்குப் பிறகு துவயத்தையும், துவயத்திற்குப் பிறகு சரம சுலோகத்தையும் அமைத்து விளக்குகிறார்.

**4) மற்ற நூல்களில் பின்பற்றியுள்ள முறையாது?**

மற்ற நூல்களில் திருமந்திரத்தை அடுத்துச் சரம சுலோகமும் அதையடுத்துத் துவயமும் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு அமைக்கப்படுவதன் விளக்கத்தையும் காண்போம்.

"நீ என்னைப் பற்று; நான் உனக்கு மோட்சத்தை அளிக்கிறேன்" என்று கண்ணபெருமான் கட்டளையிடும் விதிவாக்கியம் சரம சுலோகம்.

"ஸ்ரீமந் நாராயணனது இரண்டு திருவடிகளையும் பற்றுகிறேன்" என்று சொல்லுகிற சேதனனது செயலைத் தெரிவிக்கும் அனுட்டான வாக்கியம் துவயம்.

விதி முன்னும், அனுட்டானம் பின்னும் இருப்பது முறை என்னும் கருத்துடன் சரம சுலோகம் முன்னும், துவயம் பின்

னுமாகவும் மற்ற நூல்களில் அமைக்கப்பட்டுள்ளன.

திருமந்திரம் உபேயத்தில் கருத்துள்ளது. சரம சுலோகம் உபாயத்தில் நோக்கம் கொண்டுள்ளது. துவயமோ உபாய உபேயங்களின் அநுட்டானங்களைத் தெரிவிக்கின்றது.

இம்முறையில் மற்ற நூல்களில் திருமந்திரம், சரம சுலோகம், துவயம் என்னும் முறை பின்பற்றப்பட்டுள்ளது.

இனி மூலங்களைக் காண்போம்.

## மூலம் : 116

"புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணுநுபவ கைங்கர்யங்களே போது போக்காகையும், இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியுமுடையனாயிருக்கும் பரம ஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்."

1) **ஸ்ரீவைணவர் ஒருவர் வைணவத் தன்மை கைவரப் பெறுதற்கு அவரிடம் அமைந்திருக்க வேண்டிய பண்புகள் எத்தனை?**

ஸ்ரீவைணவரிடம் அமைந்திருக்க வேண்டிய பண்புகளாகப் பத்தினைப் பிள்ளையுலகாசிரியர் கூறுகிறார்.

2) **ஸ்ரீவைணவர் விடத்தக்கது யாது?**

பகவானைத் தவிர வேறு பொருள்களில் வைக்கும் பற்றுக்கள் யாவற்றையும், மறுபடியும் தன்னைத் தொடாதவாறு அறவே விடுதல் ஸ்ரீவைணவரிடம் அமைந்திருக்க வேண்டிய முதற்பண்பாம்.

பெற்றோர், பிள்ளைகள், உறவினர், நட்பினர் முதலானவர்களிடம் வைக்கும் பற்றையும், பொருட்செல்வம் ஆன்மானுபவமாகிற கைவல்யம் ஆகியவற்றிலுள்ள ஆர்வத்தையும் வாசனையுடன் விட்டு விடுதலும் ஸ்ரீவைணவருக்குத் தக்கனவாகும்.

3) **பகவானையே பற்றுக் கோடாய்ப் பற்றுதல் வேண்டும் என்பது ஏன்?**

எல்லா உயிர்களையும், எல்லாக் காலத்திலும் பாதுகாப்பவன் பகவான் ஒருவனே! வேறெவரும் நமக்குத் தஞ்சமல்லர். எனவே, பகவான்னயே உபாயமாகப் பற்றுதல் வேண்டும் என்பது தெளிவு.

4) **உலகப் பற்றினை விடவேண்டும் என்பதனையும், பகவானையே சரணடைதல் வேண்டும் என்பதனையும் குறிக்கும் சரம சுலோக அடி யாது?**

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்பது சரம சுலோகத்தின் முற்பகுதி.

ஸர்வ தர்மாந் - புறம்புண்டான பற்றுக்கள் யாவற்றையும்
பரித்யஜ்ய - வாசனையோடே விடுகையும்
மாம் - எம்பெருமானை
ஏகம் - ஏ
சரணம் - தஞ்சம் (என்று)
வ்ரஜ - பற்றுகையும்

116ஆம் மூலத்தில் காணப்படும் "புறம்புண்டான பற்றுக்கள் யாவற்றையும் வாசனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும்" என்னும் வரிகள் சரம சுலோகத்தின் முற்பகுதியினை விளக்கக் காணலாம்.

5) **பகவானைத் தஞ்சமென்று பற்றினால் மட்டும் போதுமா?**

போதாது. அப்பகவானைத் தஞ்சமென்று பற்றிய நமக்கு வீட்டுப்பேறு தவறாமல் கிடைக்கும் என்று துணிந்திருத்தலும் வேண்டும்.

6) **பேறு தப்பாதென்று துணிந்திருப்பவன், பின்பு செய்ய வேண்டுவது யாது?**

பேறு தப்பாதென்று துணிந்திருப்பவன், அவ்வீட்டுப் பேற்றை அடைதற்கு விரைந்து நிற்கவும் வேண்டும்.

7) **இப்பிரபன்னன் பொழுது போக்கும் விதம் யாது?**

"இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணுநுபவ கைங்கர்யங்களே போது போக்காகவும்" பிரபன்னன் இருத்தல் வேண்டும்.

வீட்டுப்பேற்றை அடைதற்குப் பிரபன்னன் விரைநது நிற்க வேண்டும் என்று முன்னர்க் கண்டோம். எனினும் பிரபன்னன் தன் வாழ்நாளில், எம்பெருமான் விரும்பிக் கோயில் கொண்டிருக்கும் திருத்தலங்களைக் காண மிக்க ஆர்வமுடையவனாக இருக்க வேண்டும்.

அத்தலங்களில் எழுந்தருளியிருக்கும் பெருமான்களின் திருககலயாண குணங்களை அனுபவித்துக்கொண்டிருகக வேண்டும். மனம், வாக்கு, காயங்கள் அனைத்தினாலும் பகவத் கைங்கரியம் செய்தலையே தனக்குப் பொழுது போக்காகக் கொண்டிருத்தல் வேண்டும்.

8) *பிரபன்னனுக்குப் பாகவத சேஷத்துவம் இன்றியமையாததா?*

ஆம்! மேற்கூறிய ஒழுக்கங்கள் எல்லாம் நிரம்பப் பெற்ற ஸ்ரீவைணவர்களைப் பிரபன்னன் கண்டால், அவர்கள் பெருமைகளைப் பாராட்ட வேண்டும். அவர்களின் உயர்வைக் கண்டு அழுக்காறு கொள்ளுதல் கூடாது. ஸ்ரீவைணவர்கள் எக்குலத்தவராயினும், அவர்களுடன் மகிழ்ச்சியாகப் பழகி அன்பு செலுத்த வேண்டும்.

9) *பிரபன்னன் எவ்வெவற்றில் ஊன்றி நிற்க வேண்டும்?*

தள்ளத் தக்கன இவை, கொள்ளத் தக்கன இவை எனத் தெளிவாக விளக்கும் திருமந்திரத்திலும், திருமந்திரத்தை விரிவாகக் கூறும் துவயத்திலும் பிரபன்னன் ஊன்றி நிற்றல் வேண்டும்.

10) *பிரபன்னனுக்கு ஆசார்ய பக்தி இருத்தல் வேண்டும் என்பது ஏன்?*

மேற்கூறிய ஒழுங்கங்களை விரைவாக எடுத்து உபதேசம் செய்பவர் குருவே! எனவே, தனக்கு உபதேசம் செய்த தன்மைகள் யாவும் தனக்கு உண்டாகுமாறு அருள்புரிந்த ஆசார்யரிடத்தில் மிக்க அன்புடையவனாகப் பிரபன்னன் இருத்தல் வேண்டும்.

11) *ஆசார்ய பக்தி மட்டும் போதுமா?*

ஆசார்யரிடத்தில் அன்பு செலுததினால் மட்டும் போதாது. ஆசார்யரிடம் நன்றியுடையவனாகவும் நடந்து கொள்ளுதல் வேண்டும். ஆன்ம நலம் கருதி அருள் புரிந்த ஆசார்யரிடத்திலும், ஆசார்யரிடம் தன்னைக் கொண்டு போய்ச் சேர்த்த எம்பெருமானிடத்திலும் பிரபன்னன் நன்றியுடையவனாக இருத்தல் வேண்டும்.

12) *பரம பாகவதரோடு கூடி வாழ்தலும் பிரபன்னனுக்கு இன்றியமையாதது என்பது ஏன்?*

ஞானமும், பற்றற்ற தன்மையும், மன அமைதியும் வாய்க்கப் பெற்றவர்கள் பரமபாகவதர்கள்.

சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய இம்மூன்றையும் பற்றித் தெளிவாக்குவது ஞானம். இவ்வுலகில் வாழவேண்டி இருப்பதால் ஒரு வேளை மனக் கலக்கம் ஏற்பட்டாலும் அம்மனக்கலக்கத்தை நீக்கித் தம்மைப் பண்படுத்திக் கொண்டு ஸ்ரீவைஷ்ணவருக்கு அமைய வேண்டிய தன்மைகள் யாவும் மேன்மேலும் வளருமாறு உதவி செய்வது ஞானமே!

ஞானம் உண்டானால் உலகில் காணப்படும் பொருள்களின் மேல் பற்றற்ற தன்மை உண்டாகும். ஞானமும், பற்றற்ற தன்மையும் வாய்க்கப்பெற்றலும், தன்முனைப்பு இல்லாமல் சாந்த குணத்துடன் விளங்குபவர்கள் பரம பாகவதர்கள்.

எனவே இத்தகைய பெருமைகளைக் கொண்ட பரம பாகவதர்களுடன் கூடி வாழ்தலும் பிரபன்னுக்கு இன்றியமையாததாகிறது.

## மூலம் : 117

"இந்த அதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தேயம்"

1) *மேற்கூறிய பண்புகள் அமையப்பெற்ற வைணவர் ஒருவர் சிந்தித்தற்குரியது யாது?*

மேற்கூறிய சிறந்த பண்புகள் பத்தும் அமையப்பெற்ற வைணவர் ஒருவர் தன்னுடைய ஒழுக்கங்களை வளர்க்கக்கூடிய திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களைப் பற்றியும் சிந்தித்தல் வேண்டும்.

## மூலம் :118

"எல்லா ப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறென்கிறது; சரம ச்லோகத்தில் ஈச்வரனாலே பெறென்கிறது; த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது."

1) *துவயத்தின் பெருமையை ஆசிரியர் எங்ஙனம் விளக்குகிறர்?*

எல்லாச் சாத்திரங்களும் ஒருவனுக்குத் தேகத்தாலேயே பேறு கிடைக்கும் என்கின்றன.

ஆன்மாவாலே பேறு கிடைக்கும் என்று திருமந்திரம் சொல்கிறது. ஈசுவரனாலே பேறு கிடைக்கும் என்று சரம சுலோகம் சொல்கிறது. ஆனால், துவயமோ பெரிய பிராட்டியாராலே பேறு கிடைக்கும் என்று கூறுகிறது. இவ்வாறு துவயத்தின் பெருமையை ஆசிரியர் விளக்குகிறர்.

2) *தேகத்தின் உதவியாலேயே பேறு கிடைக்கும் என்பார் கருத்தை விளக்குக.*

தருமங்களை மேற்கொள்வதற்குத் தேகம் வேண்டும். தேகத்

திற்குரிய இதம் இன்னது என்பதையும், பயன் இன்னது என்பதையும் தெரிவிப்பது சாத்திரமே!

வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள், ஸ்மிருதிகள் ஆகியவை சாத்திரங்கள் எனப்படும்.

சாத்திரங்கள் தேகத்தில் நோக்குடையதாய் இருப்பதால், தேகத்தாலேயே பேறு கிடைக்கும் என்று இவை கூறுகின்றன.

3) ஆன்மாவாலேயே பேறு கிடைக்கும் என்னும் கூற்றினை விளக்குக.

திருமந்திரத்தில் உள்ள நடுப் பதம் நம: என்பது. "நான் எனக்கு உரிமையுடைவன் அல்லன்; எம்பெருமானே எனக்கு உரிமையுடையவன்!" என்பது இந்நமப்பதத்தின் பொருள்.

சாதகப் பறவை என்பது பறவைகளுள் ஒருவகை. அது தன் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளச் சிறிதும் முயலாமல், மேகத்தை நோக்கியே நிற்கும். இது போலவே, ஆன்மாவானது தன்னுடைய நன்மைக்காகத் தான் சிறிதும் முயலாமல், எம்பெருமானையே நோக்கி நின்றால் பயன் சித்திக்கும் என்று இருக்கும்.

திருமந்திரமானது, இவ்வாறு முயற்சியற்ற சீவான்மாவினிடத்தில் நோக்குடைத்தாய் ஆன்மாவாலேயே பேறு கிடைக்கும் என்று கூறுகிறது.

4) ஈசுவரனாலேயே பேறு கிடைக்கும் என்பதனை விளக்குக.

பெருமானாலேயே பேறு கிடைக்கும் என்று சரம சுலோகம் கூறுகிறது. "நீ என்னையே பற்றக்கடவாய்! உனக்கு வரும் எல்லாத் தடைகளையும் போக்கி உனக்கு நன்மையையே உண்டு பண்ணுவேன். எனவே, நீ எதற்கும் கலங்க வேண்டுவதில்லை!" என்று பகவான் சரம சுலோகத்தில் கூறுகிறார்.

எனவே, சுதந்திரத் தன்மை உடைய பகவானாலேயே பேறு கிடைக்கும் என்று சரம சுலோகம் பகருகிறது.

(இதுவரை சாமானிய வைணவ அதிகாரிக்கு வேண்டுவன சொல்லப்பட்டன. இனி, சிறப்பு வாய்ந்த துவய அதிகாரிக்கு வேண்டுவன சொல்லப்படுகின்றன.)

## மூலம் : 119

"பெரிய பிராட்டியாராலே பேறுகையாவது - இவள் புருஷகாரமானாலல்லது ஈச்வரன் கார்யஞ் செய்யானென்கை."

1) ஈச்வரனே உபாயனாயிருக்க, பிராட்டியாராலேயே பேறு என்று கூறுவானேன்?

சேதனனைக் குறித்துப் பிராட்டியார் பெருமானிடம் புருஷகாரம் செய்தால்தான், பெருமான் தன் காத்தலாகிய செயலைச் சேதனனுக்குச் செய்வான்.

## மூலம் : 120

"த்வயதத்துக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும அநந்ய கதித்வமுமுடையவன."

1) சிறப்பு வாய்ந்த துவய அதிகாரிக்கு வேண்டுவன யாவை?

துவய அதிகாரிக்கு ஆகிஞ்சன்னியமும், அநன்னிய கதித்துவமும் வேண்டும்.

ஆகிஞ்சன்னியம் எனப்படுவது கன்மம், ஞானம், பக்தி ஆகிய மற்ற உபாயங்களில் தொடர்பற்றிருக்கை.

அநன்னிய கதித்துவம் எனப்படுவது, ஆன்மாவைக் காத்துக் கொள்ளுவதற்குப் பெருமானைத் தவிர வேறு ஒரு இரட்சகப் பொருள் இல்லை என்றிருப்பது.

சிறப்பு வாய்ந்த துவய அதிகாரிக்கு இவை இரண்டும் இன்றியமையாதனவாம்.

## மூலம் : 121

"இவை இரண்டும் ப்ரபந்த பரித்ராணத்திலே சொன்னோம்."

# விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

திதி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்:

காலை

5-00 முதல் 5-30 வரை – சுப்ரபாதம்
5-30 „ 6-00 வரை —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
6-00 „ 6-30 வரை —சுத்தி—முதல்மணி
6-30 „ 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 „ 12-30 „ —சுத்தி 2-வது மணி
12-00 „ 6-00 மாலை—ஸர்வதரிசனம்
6-00 „ 6-30 „ —சுத்தி, 3-வது மணி
6-30 „ 9-15 „ இரவு—ஸர்வதரிஸனம்
9-15 „ 9-30 „ —சுத்தி, ஏகாந்தசேவை.

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

9-00 முதல் 10-00 வரை —அபிஷேகம் (ரூ.100/- செலுத்தி இரு நபர் பங்கேற்கலாம்)
9-00 முதல் 10-00 „ —அபிஷேக தரிசனம் (ரூ. 5/-நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் |
|---|---|---|
| (அ) பொங்கல் | „ ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம்ரூ. 63-00 |
| (ஆ) புளியோதரை | „ ரூ. 100/- | (ஆ) யானை வாகனம்ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | „ ரூ. 75/- | (இ) தோலோற்சவம்ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | „ ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) |
| (உ) சர்க்கரைப் | | (ஈ) திருப்பாவாடை ரூ.2000/- |
| பொங்கல் | „ ரூ. 135/- | (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளி டாலர் கொடுக்கப் படும். |
| (ஊ) தோசை | „ ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய |
| (எ) ஸாகரபாத் | „ ரூ. 150/- | விரும்பும் பக்தர்கள் அதற்கான |
| (ஏ) ஸீரா | „ ரூ. 300/- | ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலே வாங்கிக்கொள்ள லாம். இதுபோது பக்தரின் பெய ரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) |

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகளுண்டு.



1) இவை இரண்டையும் பற்றி ஆசிரியர் எந்த நூலில் விளக்கியுள்ளார்?

ஆகிஞ்சன்னியம், அநன்னிய கதித்துவம் ஆகிய இவ்விரண்டையும் பற்றி "பிரபந்ந பரித்ராணம்" என்னும் நூலில் விளக்கமாகக் கூறியுள்ளார்.

2) மூலம் 116லிருந்து 121 வரை கூறப்பட்ட செய்திகளைத் தொகுத்துக் கூறுக.

திருமந்திரத்தின் பொருளை உணர்ந்து, அதன்படி நின்றொழுகும் வைணவ அதிகாரிக்கு வைணவத்துவம் கைவரப் பெறப் பத்துச் சிறந்த பண்புகள் இருத்தல் வேண்டும். மேலும திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய இம்மூன்று இரகசியங்களையும் கடைப்பிடிக்க வேண்டும்.

தேகத்தால் பேறு கிடைக்குமென்று சாத்திரங்கள் சொல்லுகின்றன. ஆன்மாவால் பேறு கிடைக்குமென்று திருமந்திரம் சொல்லுகிறது. பெருமானால் பேரு கிடைக்குமென்று சரம சுலோகம் சொல்லுகிறது. பிராட்டியாரால் பேறு கிடைக்குமென்று துவயம் சொல்லுகிறது.

பிராட்டியார் புருஷகாரம் செய்தால்தான் பெருமானும் இரட்சிப்பார். துவய அதிகாரிக்கு ஆகிஞ்சன்னிய, அநன்னிய கதித்துவங்கள் இருத்தல் வேண்டும். இவை இரண்டையும் பற்றிப் பிரபந்ந பரித்திராணம் என்னும் நூலில் விளக்கப் பட்டுள்ளது என்னும் செய்திகள் மூலம் 116லிருந்து 121 வரையில் கூறப்பட்டுள்ளன.

(தொடரும்)



# தசாவதார அடைவு

திரு. ஏ.வி. ராமகிருஷ்ணன் - சிதம்பரம்.

ஸ்ரீ லக்ஷ்மி நாராயணனை எப்பொழுதும் தாரக, போக்ய போஷகமாக சித்தத்தில் யாவு மாக நிலை பெற்றிருக்கும் 'ஸ்ரீவிஷ்ணு சித்தர்' என்ற பெரி யாழ்வார் அருளிய திருமொழி பல சிறப்பு திவ்ய சூக்திகளை தன்னிடத்தே கொண்டு எம்பெருமானின் திவ்ய குணங் களை, லீலா விபூதிகளை பரக்க கூறும் வாயிலாய் அன்பர் உள் ளம் உணர்ந்து அனுபவிக்க, பாடிப் பரவும் சிறப்பாக உள் ளது.

உயர்வற வுயர் நலமுடைய வனான அயர்வறு அமரர்கள் அதிபதியால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற 'பட்டர்பிரான்' என்று திருநாமம் தாங்கிப் பெரி யாழ்வார் என்று பெயர் பெற்ற இவ்வாழ்வார் திருப்பல்லாண்டு துடங்கி பெரியாழ்வார் திரு மொழி என்கிற திவ்ய பிரபந் தத்தை அருளிச்செய்தார். இது நாலாயிர திவ்ய பிரபந்த அடை வில் முதலாயிரமாக எடுத்தோ தப்படுகிறது.

இப்பெருமான் கிருஷ்ணவ தாரத்தில் மிக ஈடுபட்டு ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் திவ்ய விருத்தாந்தங்களை அனுபவித்து, பின்னர் சக்ர வர்த்தி திருமகன் ஸ்ரீராமபிரா னின் குண சேஷ்டிதங்களையும் அனுபவித்து பிறகு திருவரங்கத் தில் எழுந்தருளும் பெருமானின் அனந்த வைபவங்களையும் கண் டருளுகின்றார்.

இனி 4ஆம் திருமொழியில் ராமகிருஷ்ண அவதார குண வைபவங்களைக் கூறும் வாயி லாய் திருவரங்கப்பெருமானின் பெருமைகளையும் திருவரங்கம் திவ்ய தேசப் புண்ணிய செய்தி களையும் அருளிச்செய்து வரும் போது 9வது பாட்டில் ஸ்ரீமந் நாராயணனுடைய தசாவதாரங் களை ஒரே செய்யுளில் பயிலு வோர் உணர்ந்து நெகிழ்ந்து அனுபவிக்கும் வண்ணம் 'மத்ஸ் யாவதாரம்' முதல் இனி நிக ழவிருக்கும் 'கல்கி' அவதாரம் ஈறுக, தொடர் வரிசையாக, அக மகிழ்ந்து உருக்கமுடன் தோத் தரித்துப் பெருமானை புக ழும் வண்ணம் அருளிச்செய்துள் ளார். இனி இப்பாட்டு வரு மாறு:

*தேவுடைய மீனமாய் ஆமையாய்*
*ஏனமாய் அரியாய்க் குறளாய்*
*மூவுருவில் இராமனாய்,*
*கண்ணனாய்க்*
*கற்கியாய் முடிப்பான் கோயில்*
*சேவலொடு பேடை அன்னம்*
*செங்கமல மலர் ஏறி ஊசலாடி*
*பூவணைமேல் துதைந்தெழு*
*செம்பொடியாடி விளையாடும்*
*புனல் அரங்கமே.* (4-9-9)

"மிகுந்த அருள் ஒளி தேஜஸ் பொருந்திய, மத்ஸ்யமாயும், மீன வதாரமாயும், ஆமையாகிய கூர் மாவதாரமும், ஏனம் என்ற வராக அவதாரமாயும், அரி என்ற நரசிம்மமாயும், குறள் ஆன வாமனாவதாரம் எடுத் தும், மூன்று உரு இராமன் என்று பரசுராம, ஸ்ரீதசரதராம, பலராம அவதாரங்களாய், கண ணன் என்ற கிருஷ்ணவதார மாய், இறுதியாக கல்கி அவ தாரமாய் புவியில் அவதரித்து, அன்னம் தன் சேவல என்ற ஆண் அன்னததுடன் தாமரை மலர் ஏறி அதை அசைதது ஊச லாடி பூப்படுக்கையில் நெருக்கி அதனால் எழும் சிவந்த மகரந் தப்பொடி படர்ந்து விளையா டும், உபய காவேரியின் வளத் தால் செழுமையுற்ற திருவரங்கம் என்னும் திவ்ய தேசம்."

'தேவுடைய' 'கதிராயிரம் இரவி கலந்து எறித்தால் ஒத்த' ஆயிரம் சூரியர்கள் தங்கள் ஜொலிக்கும் கிரணங்களால், ஏக காலத்தில் ஒளி மிகச்செய்யும் தேஜஸ் பொருந்திய ஸ்ரீபதி யான நாராயணன். 'தேஜஸா ஆதித்ய ஸங்காச:' தேஜஸால் சூரியனைப்போல் படரொளி மிகுந்தவன்' (ஸ்ரீமத்ராமாயணம் 5-25) என்று போற்றுகி றார். இதையே பொய்கை யாழ்வார் 'பொன்திகழு மேனி' என்று இயம்பி அனுபவிப் பார். (முதல் திருவந்தாதி 98வது பாட்டு) 'கிளரொளி யால் குறைவில்லா அரியு ருவாய்க் கிளர்ந்து எழுந்து' என்று நரசிம்மபெருமானை நம் மாழ்வார் அருளியது பயின்று இன்புறத்தக்கது. (திருவாய் மொழி 4-8-7)

*'தேஷாம் ஏவாநுகம் பார்த்தம்*
*அஹம் அக்ஞானஜம் தம:*
*நாசயாமி ஆத்ம பாவஸ்தோ*
*ஞானதீபேன பாஸ்வதா'*
(பகவத் கீதை 10-11)

"பக்தர்களுக்கு அருள்பாலிக்க, அவர்கள் உள்ளத்தில் உறையும் நான் ஞானமாகிற ஒளிமி குந்த விளக்கினால் அஞான இருளை அகற்றுகிறேன், அழிக் கிறேன்" என்ற கீதாசாரிய னின் அருள் வாக்கு இங்கு பரமாத்மனின் ஒளி விளங்கும்

அருமையை அருள் பயனை உணர்த்துவதாகும்.

'அஜாயமானோ பஹுதாவிஜாயதே, தஸ்யதீரா:

பரிஜானந்தியோநிம் (புருட ஸூக்தம்)

"பிறப்பற்ற அவன் பல பிரகாரமாகப் பிறக்கிறான். அவதரிக்கிறான். புத்திமான்கள் அவன் அவதாரத்தை நன்கு அறிவார்"

'அம்புலாவு மீனுமாகி ஆமையாகி ஆழியார் தம்பிரானுமாகி' (திருச்சந்த விருத்தம் - பாட்டு 35) என்றும், 'நடந்த கால்கள் நொந்தவோ நடுங்க ஞாலம் ஏனமாய்' (திருச்சந்தவிருத்தம் பாட்டு 61) என்ற ஸூக்திகளில் திருமழிசைப்பிரான் மஸ்ய, கூர்ம, வராக அவதாரங்களை அனுபவித்துள்ளது இங்கு ஒப்பு நோக்கலாகும்.

ராமன் என்ற பெயர் சக்ரவர்த்தி திருமகனை பிரசித்தமாக குறிக்குமாதலால் 'மூவுரு இராமன்' என்று 'வெல்வேந்தர் பகை தடிந்த வீரன்' என்று குலசேகரர் போற்றும். பரசுராமனையும், ஆதிசேஷாவதாரமான பலராமனை கூறியும் இடையில் தசரத ராமனையும் போற்றிப் புகழுவார் இவ்வாழ்வார்.

இனி நிகழப்போகும் கல்கி அவதாரத்தையும் 'கற்கி ஆய்' என்று கூறும் முகத்தானே, 'தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே' என்று கீதையில் பகவான் அர்ச்சுனனுக்கு அருளிச்செய்துள்ளபடி, அறம் காக்கவும், மறம் துடைத்து பக்தர்களை காக்க, யுகங்கள் தோறும் கடல்வண்ணனாகிய லக்ஷ்மீ நாயகன் அவதரித்தருள திவ்ய ஸங்கல்பம் ஏற்றுளான் என்று'முடிப்பான்' என்ற சொல்நயமுடன் இப்பாட்டை பெரியாழ்வார் அருளியுள்ளது அவனை போற்றி தோத்தரித்து பெருமானுடைய விபவாதார கீர்த்தியை புகழ் மணக்க பாடிப் பரவுவதாகும்.

'ஆராவமுதனை பாடிப்பற', 'ஆனிரை மேய்த்தானை பாடிப்பற', 'அயோத்தியர் வேந்தனை பாடிப்பற', 'எம்பிரான் வன்மையை பாடிப்பற', 'சீதை மணாளனை பாடிப்பற', 'தூமணி வண்ணனை பாடிப்பற', என இவ்வாழ்வார் பாடுவதும் இனிமையாகும்.

இவ்வாறாக ஸ்ரீனிவாசனின் தசாவதார வைபவங்களை ஒரே அடைவில் அருளி அனுபவித்துள்ளது அவன் அருளை பெறும் புண்ணியப் பேறாகும். ✪

## தந்தைக்கருளிய ஞானகுரு

பிருகு என்னும் மாமுனிவர் ஒரு சமயம் கொடும் கானகத்தில் கடும் தவம் மேற்கொண்டார். தனது தவத்திற்கு இடையூறு தோன்றுமோ என அஞ்சி முன்கூட்டியே திட்டம் வகுத்தார். "இங்கு என்னுடைய தவத்தைக் கலைப்பவர்கள் பிரம்ம ஞானத்தை முற்றும் மறப்பார்களாக" என்று மாநிலம் அறிய சாபம் அளித்தார். பின்னர் தவத்தில் ஆழ்ந்தார். அவருடைய கடுந்தவத்தின் வெம்மை தேவர்களைச் சுட்டது. எனவே விஷ்ணுவின் துணையுடன் அவர்கள் சிவபெருமானிடம் சென்று காத்தருள வேண்டினார்கள். அவர்களுக்கு அருள்புரிந்திட சிவபெருமான் சிந்தை கொண்டார். தவத்தில் ஆழ்ந்திருந்த பிருகு முனிவரின் தலையில் சிவபெருமான் தமது திருக்கரத்தை வைத்தார். தவத்தின் சூடு தணிந்தது. தவமும் கலைந்தது. முனிவர் கண்விழித்தார். சிவபெருமானுடைய அருள் காட்சியினைக் கண்டு உள்ளம் கரைந்தார். அவருடைய திருவடிகளைத் தொழுது வணங்கினார். தனது தவத்தை சிவபெருமான் கலைத்துவிட்டதால் தான் இட்ட சாபம் அவரைத் தீண்டுமோ என்று மனம் பதைத்தார். தான் புரிந்திட்ட பிழையை மன்னித்தருள சிவபெருமானை இறைஞ்சி நின்றார். 'நீ இட்ட சாபம் வீண்போகாது உன் சாபத்தை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளுகிறேன். நீ அஞ்ச வேண்டாம்" என்று சிவபெருமான் கூறியருளினார். பின்னர் முனிவரின் சாபத்தின் காரணமாக சிவபெருமான் பிரணவப் பொருளை மறந்துவிட்டார்.

முருகப்பெருமானே தந்தைக்கு பிரணவ உபதேசம் புரிந்தருளினார். தந்தைக்கு அருளிய குருவானதால் முருகப்பெருமானுக்கு சுவாமிநாதன் என்னும் திருநாமம் தோன்றியது. அவர் கோயில் கொண்ட தவமும் 'சுவாமிமலை' ஆயிற்று.

திரு. ஆர். சுப்பாராவ் - திருக்கோவலூர்.



# தெய்வங்களின் குடும்பம்

—திருமதி. ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.

ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் கொப்பூழில் மலர்ந்த தாமரை மலரில் உதித்தவர் பிரம்மா. திருப்பாற்கடலில் பூத்த தாமரையில் உதித்தவள் ஸ்ரீதேவியாகிய லெக்ஷ்மி. எனவே லெக்ஷ்மி பிரம்மசோதரி.

பிரம்மாவின் நெற்றியிலிருந்து தோன்றியவர் சிவபெருமான். பிரம்மாவின் நாவிலிருந்து தோன்றியவள் ஸ்ரீசரஸ்வதி. எனவே அவள் சிவனின் சோதரி சிவனின் ஒரு வடிவமாகிய தக்ஷிணாமூர்த்தியை நோக்கினால் இது புரியும்.

ஸ்ரீமஹாவிஷ்ணுவின் யோக சக்தியே (Internal Energy) அம்பிகை ஆவாள். கிருஷ்ணாவதாரத்தின் போது அவரது சோதரியாக துர்க்கையாக அவதரித்தாள். அவள் கையில் விஷ்ணு போலவே ஸ்ரீசங்கு சக்கரம் தாங்கி இருப்பாள். தட்சனின் மகள் தாட்சாயினி, இமவானின் மகள் உமை, பர்வதராஜனின் புத்திரியாகிய பார்வதி, மலையத்துவஜன் மகள் ஸ்ரீமீனாக்ஷி என்று தோன்றிய எல்லா அவதாரங்களிலும் சிவபெருமான் மீது அன்பு கொண்டு அவரையே மணந்தாள் ஸ்ரீவிஷ்ணு சோதரி.

சிவனின் சோதரியாகிய சரஸ்வதி பிரம்மாவையும் பிரம்மனின் சோதரியாகிய லெக்ஷ்மி விஷ்ணுவையும் மணம் புரிந்து கொண்டனர்.

பார்வதி மஞ்சள் பொடியினைக் கையினால் பிடித்து உண்டாக்கிய பாலகனே ஸ்ரீவிநாயகர். இவர் பிரம்ம புத்திரிகளாகிய சித்தியையும் புத்தியையும் மணந்தார்.

சூரனை அழிப்பதற்காக பரமசிவனின் நெற்றியில் ஜோதிப்பிழம்பாகத் தோன்றியவர் ஸ்ரீ சுப்ரமணியர். சூரனை ஒழிக்கத் தமக்கு ஒரு மருமகன் தோன்றினானே என மஹாவிஷ்ணு ஆனந்தக் கண்ணீர் வடிக்க, அந்தக் கண்ணீரில தோன்றிய வள்ளி, தெய்வானை (சுந்தரவல்லி, வேதவல்லி) இருவரும் ஸ்ரீசுப்ரமணியரை மணந்தனர். ஸ்ரீமஹாவிஷ்ணு மோகினி அவதாரம் கொண்டு சிவனுடன் கூடிப் பிறந்த குழந்தையே ஐயப்பன் என்னும் மணிகண்டன் ஆவார். இவரது மனைவியர் பூர்ணையும் புஷ்கலையும் ஆவர்.

இக்குடும்பத்தில் சேராத ஸ்ரீராமபக்தரும் வாயுபுத்திரருமாகிய ஸ்ரீஆஞ்சநேயரையும் நாம் தெய்வமாக எண்ணி வழிபடுகிறோம்.

"இந்து மதத்தில்தான் எத்தனை தெய்வங்கள்?" என்று எள்ளி நகையாடுவோர் பலர். முதலில் இந்து பெயரே நமக்கு உரியதுஅல்ல. "சனாதனதருமம்" என்பதே நமது மதத்துக்குரிய பெயர். எவ்வாறு சர்க்கரை, வெல்லம் ஆகியவற்றினால் செய்யப்படும் மைசூர் பாகு, லட்டு, பாதுஷா, அல்வா, ஜிலேபி, கேசரி, அப்பம், அதிரசம், பால் கொழுக்கட்டை, புட்டு என்ற பலவகையான இனிப்புப் பதார்த்தங்களை அவரவர்தம் விருப்பப்படி விரும்பி உண்ணுகின்றனரோ, அதேபோல மேற்கூறிய தெய்வங்களையும் இம்மதம் தழுவும் மக்களாகிய நாம் அவரவர் விரும்பும் தெய்வத்தை இஷ்ட தெய்வமாகவும் குடும்ப தெய்வமாகவும் வணங்கி வழிபடுகிறோம்.



# பாமரனும் கீர்த்தனையும்

டாக்டர் கோவி. நரசிம்மன் - அனந்தப்பூர்.

இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் எனும் முத்தமிழில் இயலையும், நாடகத்தையும் இனியமுறையில் பாமரர்களுக்குச் சேர்ப்பிப்பது இசையாகும். இசையெனும் சொல்லுக்கு இசைவிப்பது, வயப்படுத்துவது, ஆட்கொள்வது என்பன பொருட்களாகும். ஒரு கருத்தை இசையின்றிச் சாதாரணமாக எடுத்துரைப்பின் அது கேட்போரின் உள்ளத்தை ஈர்க்காது. அதே கருத்தை இசையோடு கூட்டினால் அது என்றைக்கும் மறவாத கருத்தாக அமைகின்றது.

இசைக்கு அடிப்படையாக இலங்குவன இராகமும் தாளமுமாகும். இவ்விரண்டோடு அனுபவமும் சேருமாயின் அப்படைப்பு மக்களின் மனதினின்று நீங்காதவனவாக அமையும். படிப்பறிவில்லாத பாமர மக்கள் தமக்குத் தெரிந்த மெட்டுக்களில் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடுகின்றனர். அவையும் இசையுடன் பாடப்பெறுவதால் இனிமை பயப்பனவாக அமைகின்றன.



கீர்த்தனை இலக்கியங்களில் பெரும்பாலும் மக்கள் சாதாரணமாகப் பயன்படுத்துகின்ற எளிய சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. சான்ருக நம்பினேன், சம்சாரம், இச்சை, பூமி, சாமி, காம, குரோதம் முதலியன.

இடைக்கால தமிழ் இலக்கியத்தில் அதாவது பக்தி இலக்கியக காலத்தில் பன்னிரு ஆழ்வார்கள் இயற்றிய நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் உள்ள பாசுரங்களையும் கம்பராமாயணப் பாடல்களையும் மிகுந்த புலமை பெற்றோரால் மட்டுமே அறிதல் இயலும். மேலும் தத்துவார்த்த அர்த்தங்களை அறிய வேண்டுமாயின் திவ்விய பிரபந்தத்திற்கு வெளியான ஆறுயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி முதலிய வியாக்கியானங்களைக் கற்றுலன்றி முறையாகப் பொருள் புரிந்து கொள்ளுதல் கடினம்.

கம்பராமாயண சுந்தர காண்டத்தில் அனுமன் சீதையுள்ளயிடத்தைத் தெரிந்துவர இலங்கையில் அங்குமிங்கும் திரிகிருன். இக்காட்சியைக் கம்பர்,

"ஆத்துறு சாலைதோறு மானையின்
கூடந்தோறும்
மாத்துறு மாடந்தோறும் வாசியின்
பந்திதோறும்
காத்துறு சோலைதோறுங் கருங்கடல்
கடந்த காலாற்
பூத்தொறு வாவிச்செல்லும் பொறிவரி
வண்டிற் போனான்"

(சுந்தரகாண்டம்,
ஊர்தேடுபடலம் பா.101)

என்கிருர். அதாவது பசுக்கள் கட்டப்பட்டிருக்கும் கொட்டகைகளிலும், யானைகள் கட்டப்பெற்றுள்ள இடங்களிலும், பெரியனவான தேர்கள் இருக்கின்ற இடங்களிலும், குதிரைகளைக் கட்டுகின்ற சாலைகளிலும், காவல் அமைந்த சோலைகளிலும், கருங்கடலைத் தாண்டி வந்த கால்களினால், மலர்களிலுள்ள தேனை விரும்பிச் செல்லும் வண்டைப் போல அனுமன் சென்ருன்.

அருணசலக் கவிராயர் இயற்றிய இராமநாடகக் கீர்த்தனையில் அனுமன் எவ்வாறு சீதையைத்தேடிச் சென்ருன் என்பதை,

பல்லவி

தேடித்திரிந்தானே - சீதாதேவி
தன்னை அனுமானே

அநுபல்லவி

ஆடிப்பறக்கின்ற காற்றும் நுழையாத
அலங்கைக் கொத்தளம் தங்கும்
இலங்கைப பட்டணம் எங்கும்

சரணம்

வாரணச் சாலையும் மந்திரச்சாலையும்
மலர்ச் சோலையும் சா வடிகளும் (தேடி)

தோரண மேடையும் பூமலர் ஓடையும்
துலைகளும் தலைவாசல் படிகளும் (தேடி)

தேர் அடிகளும் சோர்னப்போர்
அடிகளும் செந்நெற்
சேர் அடிகளும் மதில் அடிகளும் (தேடி)

நிரை விரை புகுதை வளைகளும்
தொளைகளும்
கொடிகளும் செடிகளும் கொடிகளும் (தேடி)
நாரியர் காவல் இருக்கும் சிறைகளும்
நாடகச்சாலையும் நவரத்தின அறை-
களும்
(தேடி)
ஏராளமாக் கோலம் எழுதிய
தறைகளும்
ஏகாந்த ஸ்லதமும் தண்ணீர்
படித்துறைகளும் (தேடி)
இடுக்குகளும் இருட் டொடுக்குகளும்
உறி
அடுக்குகளும் மூலை முடுக்குகளும்
பாய்ந்து (தேடி)

எனக்கூறுகின்ருர். மேற்கூறிய இருபாடல்களையும் ஒப்பு நோக்குவோமாயின் முன்னதைவிடப் பின்னது பொருளாலும் அமைப்பாலும் எளிமையுடைத்து. எனவேதான் பாமர மக்கள் கீர்த்தனைகளை விரும்பினர் எனலாம்.

காவியம் படைப்போன் தனக்குள்ள மிகுந்த கல்வியறிவின் பொருட்டு மிகவுயர்ந்த உவமைகளைக் கையாளுகின்ருன். அது நாட்டுப்புறத்தாரின் செவிகளைச் சென்றடைவதில்லை. கீர்த்தனை இயற்றுவோன் தன்னைச் சுற்றியுள்ள பொருட்களை உவமையாகக் கூறுவதால் பாமர மக்கள் எளிதில் புரிந்து கொள்ள இயலும். எடுத்துக்காட்டாக,

"துறைய டுத்த விருத்தத்
தொகைக்கவி
குறைய டுத்த செவிகளுக்
கோதில்யாழ்
நறைய டுத்த வசுணநன்
மாச்செவிப்
பறைப டுத்த போலுமென் பாவரோ"
(கம்ப அவை. 7)

என்ற பாடலுக்கு, "பேரரறிஞரின் பலதிறப்பட்ட இனிய கவிகளைக் கேட்டு இன்புற்ற பெரியோருடைய செவிகளில், பல விகற்பங்களைக் கொண்ட விருத்தத்தொகை விழுந்தால் அது யாழிசை கேட்டு இன்புறும் 'அசுணம்' எனும் விலங்கின செவியில் பறையொலி கேட்டதைப் போன்று அமையும்" என்பது பொருளாகும். இப்பாடலில் வரும் 'அசுணம்' என்பது இசையறி விலங்கு இது இனிய யாழ் ஓசை கேட்பின் அருகில் அமர்ந்து இன்புறும் பறையொலி கேட்பின் அதன் செவிப் பறை கிழிந்து உயிர்துறககும் இயல்புடைத்து இது பாமரர்களுக்கு ஏற்ற உவமையன்று.

இராம நாடகக் கீர்த்தனையில் கவி, தான் எதற்காக இந்நாடகக் கீர்த்தனையை எழுதினேன் எனக்கூறும் போது ஆதியில் பிரம்மதேவன் நூறுகோடி விஸ்தாரத்தில் ஆதிகாவியம் எனப் புகழப்பெறும் அளவில் இராமாயணத்தை இயற்றினார். பின், வால்மீகமுனி இருபத்து நான்காயிரம் பாடலில் இயற்றினார். கம்பரோ பன்னீராயிரம் பாடல்களினால் இராமாயணத்தைத் தமிழில் இயற்றினார்.

"காதலால் இவர் செய்ய நான்
அதுக்கிப் பாலே
கருடன் பறக்க ஒரு கொசுவும்
பறந்தாற்போல
ஈதொரு நாடகமா ஓதினேன்
புவிமேலே
எட்டும் இரண்டும் தெரியா
ஏழைநான் ஆகையாலே"
(இ.நா.கீ. 6)

இக்கீர்த்தனையில் கருடன் கம்பனோடும் கொசுவைத் தன்னோடும் ஒப்பிட்டுக்கூறுகிருர் கீர்த்தனை ஆசிரியர். மேற்கூறிய இரு பாடல்களையும் ஒப்பு நோக்குவோமாயின் 'அசுணம்' விலங்கு மிகச் சிலரால் அறியப்பட்டது. கருடனும் கொசுவும் அனைவரும் அறிந்தது.

தத்துவறிஞர்கள் அறிந்த தத்துவார்த்தங்களை மிக எளிய முறையில் விளக்க கீர்த்தனை பெரிதும் பயன்படுகின்றன. சித்து, அசித்து, ஈசுவரன் பற்றியும் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை ஆகியன குறித்துச் சாதாரண மக்கள் நேரடியாக அறியார். ஆனால் கீர்த்தனை வழி அறிய வாய்ப்புண்டு.

"காரார் கடலை யடைத்திட்
டிலங்கை புக்கு
ஓராதான் பொன்முடி ஒன்பதோ
டொன்றையும்
நேரா அவன் தம்பிக்கேநீ யரசீந்த
ஆரா வமுதினைப் பாடிப் பற!
அயோத்தியர் வேந்தனைப் பாடிப்பற!
(பெரியாழ்வார் திருமொழி 316)

இதனைக் கீர்த்தனை ஆசிரியர்,

"நம்பி விபீஷ்ணும்வான் தனக்கு ஸ்ரீ
ராமனாய் அவதரித்தார்
நம்பாமலிருந்த இராவணசுரன்
பங்கில்
நமனாயிருந்தவன் தலையறுத்தார்"
(அ.ப.கீ. 18)

என அர்ச்சாவதாரத்தில் ஒன்ருன இராமாவதாரம் பற்றி இருபாடல்களும் குறிப்பிடினும் பின்னது இறைவனின் குணத்தைச் சிறப்பாக விளக்குகின்றது.

ரிஷிகள், முனிகள் முதலானோர் பன்னாட்கள் தவமிருந்து தாம் நினைத்தக்காரியத்தை நிறைவேற்ற தீ வளர்த்து நெய் சொரிந்து யாகம் செய்வர். இதனால் மோட்சம் அல்லது வேறு பயன் கிடைக்கும் எனக் கருதினர். படித்தறியா பாமரிய மக்கள் தமக்குக் கல்வியறிவு இன்மையான் பாகவதர் பாடுகின்ற பாட்டை ஒருமுறைக்கு இருமுறை கேட்டு மனனம் செய்து கொள்வர். அதனை ஓய்வு நேரங்களில் பாடிப்பாடி அதனையே முக்திக்கு வழியாக மேற்கொள்வர். இதனைச் சம்ஸ்கிருதத்தில் 'வாக்மய மோட்சம்' என்பர். அதாவது வாக்கினால் மோட்சம் பெறுதலாகும்.

# மருத்துவ குணம் கொண்ட வில்வமரம்!

திரு. எம்.ஆர். ஜெயச்சந்திரன் - திண்டுக்கல்.

வில்வ மரம் இந்தியாவில் எல்லா இடங்களிலும் காணப்படுகின்றது. பெரும்பாலும் சிவன் கோயில்களில் வளர்க்கப்படுகின்றன. இவைகளை பூஜைக்கு உபயோகிக்கின்றனர். மும்மூர்த்திகளில் ஒருவரான சிவபெருமானின் பூஜைக்கு மிகவும் ஏற்றது வில்வ இலையாகும். இதனை கூவளம் என்றும் கூறுவார்கள். பெரும்பாலும் இம்மரத்தை வில்வமரம் என்றுதான் அழைக்கின்றனர். வில்வமரம் முள்ளுடையது. இம்மரத்தின் இலை, பட்டை, வேர், பழம் யாவும் சித்த, ஆயுர்வேத மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.

## வில்வ இலை

உடலில் தோன்றும் சொறி, கரப்பான் முதலியவற்றை தடுக்கக்கூடியது. உடல் வறட்சியை நீக்க வல்லது. மூளைச்சோர்வு நோய்களுக்குப் பலனளிக்கும் தன்மையுடையது. மேக நோய் சம்மந்தமான புண்களைப் போக்கக்கூடியது.

ஒரு பிடி இலையை சுமார் நான்கு அவுன்ஸ் நீரில் எட்டு மணி நேரத்திற்குக் குறையாமல் ஊறவைத்துப் பின்பு இலையை நீக்கி விட்டு, நீரை மட்டும் அருந்த வேண்டும். இதற்கு 'வில்வ குடிநீர்' என்று பெயர். இதனால் தீராத நாட்பட்ட வயிற்றுவலி நோய் நீங்கும். ஆயுர்வேத, ஆங்கில மருத்துவர்கள் கூறும் எல்லா வகை குன்ம ரோகங்களுக்கும் 'வில்வக் குடிநீர்' போதுமானது. அதாவது நோய் தீர்க்க வல்லது. வில்வக் குடிநீரானது



அதிகாலையில் ஒரு அவுன்சுக்கும் குறையாமல் பருகி வருவதன் மூலம் அது வாத வலிகள், மேக நோய்கள் முதலியவற்றைப் போக்கும். அத்துடன் மூளைக்கும் பலத்தைக் கொடுத்து, ஞாபக சக்தியையும் அதிகரிக்கின்றது. வில்வ இலையை எந்த விதத்திலாவது சாப்பிட்டு வ்ர தேகம் பளப் பளப்பாய் விளங்கும்.

## வில்வப் பட்டை

பொதுவாக உடல் வறட்சியினால் ஏற்படும் விக்கல், மார்பு வலி, வாய்வுத் தொந்தரவுகள் போன்றவற்றிலிருந்து விடுபட வில்வ மரப்பட்டையை இரண்டு ரூபாய் எடை அளவில் எடுத்துக் கொண்டு வந்து இடித்து, கால்படி நீர்விட்டுக் காய்ச்சிக் குடித்துவர நோய் பறந்துவிடும்.

வில்வ வேரை கசாயம் செய்து குடித்தால் விக்கல் விலகும். பித்த சுரம் குணமாகும். பேதி நிற்கும். உடல்வலி நீங்கும்.

## வில்வ லேகியம்

ஜீரணக் கோளாறு, உடல் பலகீனம், வாய்வுத் தொந்தரவுகள், பசியின்மை, குன்ம வயிற்று வலிகள் போன்ற நோய்களுக்கு வில்வ இலையை காயவைத்துத் தூள் செய்து பசும் பால் விட்டுக் காய்ச்சி அத்துடன் போதுமான அளவு நெய்யும், பனை வெல்லமும் சேர்த்துக் கொண்டு லேகியம் போல் ஆக்கிச் சாப்பிட்டு வரலாம்.

## வில்வ பழம்

வில்வ மரத்தில் இருவகை உண்டு. ஆனால் இரண்டும் குண வித்தியாசமில்லாதவைகளே ஆகும். ஒருவகை உருண்டை வடிவமான காய்களையும், மற்றொரு வகை நீண்ட உருண்டை வடிவமுள்ள தடித்தக் காய்களையும் கொடுக்கின்றன. வில்வ பழத்தின் ஓட்டை ஒட்டியுள்ள சதைப்பகுதி சாப்பிடுவதற்கு நல்ல ருசி உள்ளதாகும். இதைச் சாப்பிட்டு வருவதால் உடலில் உஷ்ணம், தினவு, எரிச்சல் போன்ற உபாதைகள் நீங்கும். பழத்தை எண்ணையில் காய்ச்சித் தலைக்குத் தேய்த்து வர மூளை, கண் முதலியவை குளிர்ச்சிப் பெறும்.

வில்வ இலையினால தயாரிக்கப்படும் மகாவில்வாதி லேகியம், வில்வக் குடிநீர் மிகவும் பிரசித்தி பெற்றவையாகும். மொத்தத்தில் சிவபெருமானின் வில்வமரம் (கூவளம்) பல்வேறு விதமான நோய்களிலிருந்து விடுதலை அளிக்கிறது. ஆகவே! "வில்வத்தை வளர்ப்போம், நோயினால் அழியும் உடல் செல்வத்தைக் காப்போம்"



# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர் திரு. மா. வரதராஜன் - திருப்பதி.

## ஆ

ஆக்கம் - சந்தோஷம், விருத்தி, அதிசயம், மோக்ஷம்.
ஆக்கன் - புதிது; நாற்றம்; கொளுத்தினது; செயற்கையானது
ஆக்கனாயிருப்பானொரு சாந்து - ஆக்கப்பட்டதாய் மணமேற்றின சந்தனம்
ஆக்கை - சரீரம்
ஆக்கையும் ஆவியும் - உடலும் உயிரும்
ஆகங்கள் - உடம்புகள்
ஆகத்தாள் - உடம்பிலே இருப்பவள்
ஆகமூர்த்தி - அடியார்கள் உகந்த அர்ச்சாவதாரம்
ஆகள் - பசுக்கள்
ஆகரம் - உண்டாகுமிடம்
ஆகல்பம் - அலங்காரம்
ஆகவம் - யுத்தம்
ஆகாதார் - தகாதவர்
ஆகாரம் - வடிவம், ஊண், அவயவ அமைப்பு
ஆகிடுகாண் - உண்டாகட்டும்
ஆகின்று - ஆகாநின்றது
ஆகுதி - ஹோமம்
ஆகும் பரிசு - ஆகும் விதம்
ஆகுலங்கள் - வருத்தம், அலமாப்பு, பூசல்
ஆகுலம் - பரவசமாயிருக்கும் நிலை
ஆங்காரம் - செருக்கு, அஹங்காரம்
ஆச்சீ - அம்மா என்பதன் விளி
ஆசரித்தல் - அனுட்டித்தல்
ஆசாரம் - சீலம் (ஒழுக்கம்), காட்சி
ஆசி - வாழ்த்து, யுத்தம்
ஆசு - குற்றம், ஆயுதப்பிடி, கத்தி, வேகம் கவசம்
ஆட்கொள்வான் - அடிமை கொள்ளுமவன்
ஆட்செய்தல் - அடிமை செய்தல்
ஆட்டத்து வெளி - வையாளி விடுகிற வெளி
ஆட்டி - ஆணுக்குப் பெண்பால் ஆட்டி. இலங்கை ஆட்டி, நூலாட்டி என்று சேர்ந்து வருமே தவிர, ஆள் என்பது போல ஆட்டி தனியாக வருவதில்லை.
ஆட்டியும் தூற்றியும் - நன்மைகளைச் சொல்லி இருந்த இடத்தில் இராமல் செய்து அலைய வைத்தல் ஆட்டுதலாகும். புறம் பேசிப் பழி சொல்லுதல் தூற்றுதலாகும். 'ஆட்டித் தூற்றி அம்பலத்தில் வைக்கின்' என்று பெண்கள் பேச்சு.
ஆட்டு வாணியன் - ஆடு விற்பவன்
ஆட்டைக்கொரு விருந்து - வருஷத்துக்கு ஒரு விருந்து.
ஆட்படுத்தல - உரிமைப்படுத்தல்
ஆட்படுதல் - அடிமைப்படுதல்
ஆட்பார்த்தல் - அடிமையைத் தேடுதல்
ஆடரவமளி - ஆடும் பாம்பாகிற படுக்கை. மூச்சுக் காற்றினால் மேலும் கீழும் ஆடுகிற ஆதிசேஷனாகிற படுக்கை.
ஆடல் நன்மா - ஆவாலங்கொட்டி ஆடிக்கொண்டு வந்து தோன்றின குதிரை. ஆவாலங் கொட்டுகையாவது குதிரையை நடை பழக்குகைக்குத் தட்டிக்கொடுத்தல்

ஆடல் பறவை - பறக்கும் பறவை
ஆடல் மா - திருமங்கையாழ்வாருடைய குதிரையின் பெயர்
ஆடு பறவை - வெற்றியையுடைய பறவை, கருடன்
*ஆண்டாள் - பெரியாழ்வாரின் பெண் பிள்ளே, ஸ்ரீபூமிப்பிராட்டி அவதாரம், கோதை, சூடிக்கொடுத்த நாச்சியார்.
ஆண்டளக்கும் ஐயன் - திருஆதனூர் இறைவன் பெயர். காலத்துக்கு நிர்வாகனான இறைவன்
ஆண்டாறு மாஸம் - ஆண்டுக்கும் ஆறு மாதத்துக்கும்
ஆண்டைக்கு - ஆண்டுக்கு, அப்போதைக்கு அப்போது என்பது போல
ஆண்டையார் - ஆண்டுக்கணக்காக பழகியவர், பழைய அடியார்
ஆண்பிள்ளைச் சோருள்வி - பெண் வேடம் பூண்ட ஆண். அமுத விபாகம் செய்யத்தோன்றிய மோகினியைக் காமுற்ற சிவனைச் சொல்லுவதற்காக பெரியவாச்சான் பிள்ளை படைத்த சொல் இது. சோருள்வி என்ருல் சோற்றை ஆளும் பெண். ஆள்வி என்ருல் ஆள்பவள்/ன் என்ருகி, சோருள்வி சமையல்காரியாகி ஆண்பிள்ளைச் சோருள்வி என்பது சமையல்காரி வேஷம் பூண்ட ஆண் என்று பொருள்.
ஆணறுத்து - ஆண் அல்ல என்று தெளிவாக்குதல்
ஆணம் - அரண், புகல்
ஆணுறு பெண்ணுறு - நதமும் நதியும், மேற்கு முகமாகப் பாயும் ஆறு நதம். கிழக்கில் பாயும் ஆறு நதி.
ஆணுறும் - ஆண் நாறும் - ஆண்மை மணம் வீசும், ஆண்மைத் தனமுள்ள பெண். 'ஆரடா வன், கோயிலிலே ஆணுற்றம் பெண்ணுற்றம்' என்பது வழக்கு. யாருமறியாமல் கோயிலில் யாரோ புகுந்து ஒளிந்திருப்பது கண்டு ஆண் பெண் இருப்பதாக மணத்தாலே அறிந்து கேட்கும் கேள்வி.
ஆணிச் செம்பொன் - அழுக்கு கலப்பு யாதும் ஒட்டாத பொன்
ஆதல் - இதுவாதல், அதுவாதல், இதுவாவது, அதுவாவது
ஆதானும் - ஏதேனும், ஏதாவது
ஆத்ம ப்ராப்தி - தன்னையே 'தான் அநுபவித்துக் கொண்டிருக்கும் கைவல்யநிலை
ஆத்ம அபகாரம் - உடலையே ஆத்மாவாக நினைத்தலும் ஆத்மாவை சுயேசசையாக நினைத்தலும்.
ஆதஞ்சனம் - பாலில் பிரை குத்தித் தோயத்தல
ஆதபம் - வெயில்
ஆதியம் பகவன் - எப்போதும் இருப்பவனாய விபரீதங்களுக்கு எதிர்த்தட்டாய உள்ள பகவான
ஆதியம் புருடன் - முதல்வனாய் ஆனந்தம் முதலான குணங்களோடு கூடியுள்ள பரம புருஷன
ஆதுகொலோ - அதுவோ, யாதோ
ஆதேசம் - சொல்லில் ஒரெழுத்தைத் தள்ளிப போட்டு அதன் மேலே வருகிற எழுத்து. உத்தரவு.
ஆந்தராளிகர் - நடுவிலுள்ளவர், சேதனனுக்கும இறைவனுக்கும் இடையே இருந்து இணைப்பதால் ஆசாரியர் ஆந்தராளிகராகிறர
ஆந்தனையும் - ஆகுந்தனையும், முடியும் வரையில், கூடிய வரையில்
ஆநிரை - பசுநிரையினுடைய திரள்
ஆநெய் - பசுநெய்
ஆப்பு - உறவு, கட்டு
ஆப்பூண்டு - கட்டுண்டு, உகரம் நீண்டது
ஆப்பைக்குறி - அகப்பை அளவு
ஆமகன் - தகுதியான புருஷன்
ஆபிஜாதயம் - குடிப்பிறப்பு
ஆமளவு - முடிந்தவளவு
ஆமிடம் - கூடுமான இடம
ஆமின் - ஆகுங்கோள்
ஆமைத்தாலி - சாதிக்கு ஏற்ப ஆமை வடிவான தாலி. இடைப்பெண்கள் இன்னும ஆமைத் தாலி பூணுகிறர்கள்.
ஆய்ச்சி - அம்மா, இடைச்சி
ஆய்தல் - தெளிதல், தெரிதல

ஆய்த்தாய் - இடைச்சியான அன்னை

ஆய்த்து - ஆயிற்று

ஆய்ப்பாடி - இடைச்சேரி

ஆயக்கால் - வாகனம் முதலியவற்றைத் தாங்கும் முட்டுக்கோல், வாகனத்தில் எழுந்தருளும் பெருமாள் சேவிப்பவர்களுக்காக நிற்கும் போது வாகனம் தூக்கிகள் இளைப் பாறுவதற்காக ஆயக்காலைத் தரையில் நிறுத்தி வைத்து அதில் வாகனத்தை வைப்பர்.

ஆயம் - தோழிமார்

ஆயர் பாவை - இடைப்பெண்; நப்பின்னைக்கும் பெயர்

ஆயவை - ஆனவை; நடந்து போன

ஆயனார்கோயில் - உயர வளர்ந்த த்ரிவிக்ரமப் பெருமாள் கோயில், ஸ்ரீரங்கம் தெற்கு ராயகோபு ரத்துக்கு வெளியே இருப்பது

ஆயிரத்தளி - தளி-கோயில், ஆயிரம் லிங்கங்களுள்ள கோயில் கங்கை கொண்ட சோழபுரம்.

ஆயிருக்க - ஆனாலும்

ஆயோ - கிளி குருவிகளை ஓட்டும் சொல்

ஆர்த்துப் புடைக்க - கட்டியடிக்க

ஆர்ப்பு - ஆரவாரம்

ஆரக்கற்கில் - நெஞ்சிலே படியும்படி கற்கில்

ஆராவமுதம் - திருப்தி பிறப்பிக்காத அமுதம்

ஆராவமுதாழ்வார் - கும்பகோணம் பெரிய பெருமாள். ஆழ் வார் என்ற பெயர் திவ்யப்பிரபந் தம் அருளியவர்களுக்கு மட்டுமே ஏற்பட் டது. அவர்கள் இறைவனது குணத்தில் ஆழங்கால் பட்டதால் உண்டானபெயர் இது. கும்பகோணத்து மூலவர திருமழி சையாழ்வாரிடம் ஈடுபட்டவராகையால் பெருமாள் ஆழ்வாராகி ஆழ்வார் பிரா னானார்.

ஆராவயிற்றுன் - நிறையாத வயிற்றையுடையவன்

ஆல் - ஆலிலை, நீர்

ஆரோதமடித்தல் - பின்வாங்குதல்; மேன்மை பாராட்டி தள்ளிவிடுதல்

ஆலகண்டன் - உருத்திரன்

ஆலங்கட்டி - மழைபெய்யும் போது சில வேளை களில் விழும் உறைந்த நீர்க்கட்டி. இத்தகைய மழையே கல்மாரியாம்.

ஆலிநகர் - திருவாலி

ஆலியா அழையா - ஆடி அழைத்து

ஆலத்தி வழிக்க - ஆலத்தி எடுத்து திருஷ்டி தோஷத்தை அழிப்பது

ஆலின்மேலால் அமர்ந்தான் - ஆலின் மேல் - நீரின் மேல் உள்ள, ஆல்- ஆலிலையில் அமர்ந்தான். இந்த இடத்தில் மணவாளமாமுனிகள் இப்படி உரை நிகழ்த்துகையில் முதலிலுள்ள ஆலுக்கு சிலர் நீர் என்று பொருளில. ஐயம் கொண்டு சர்ச்சை செய்தனர். அருகில் இருந்த சிறு பிள்ளையான கந் தாடைநாயன் ஆலங்கட்டி என்பது நீர்க்கட்டி அன்றோ என்று சொன்னா ராம். அதுகேட்டு மாமுனிகள் உகந்தார.

ஆலு மாவலவன் - ஆலும்படி - குதிரை நர்த்தனம் பண் ணும்படி நடத்த வல்லவன், ஆலுகிற மாவை - பறந்து பாய்கிற மாவை, மா-மிருகம், குதிரை.

ஆவணவோலை - விலையோலை; கிரயச்சீட்டு

ஆவணம் - அடிமை

ஆவல்லி - ஆனவல்லி என்பதன் குறுக்கல் அழகி யவல்லி-கொடி

ஆவலிப்பு - பலம், கரவம

ஆவாலங்கொட்டுகை - குதிரை நடை. அழகுக்குக் காக் கொட் டுகை

ஆவித்தல் - கொட்டாவி விடுதல்; பெருமூச்சு விடு தல்

ஆழ்வார் - இறைவனது வடிவு, இயல்பு, குணம், திருவிளையாடல்கள் - ஆகியவற்றில் ஆழங்காலபட்டு பிரபந்தம் பாடிய ஒவ் வொருவருக்கும் ஆழ்வார் என்று பெயர்

ஆழ்வார்கள் - பிரபந்தம் பாடிய ஆழ்வார்கள் பன்னி ருவருக்கும், திருவாழி திருச்சக்கரத்தும் பெயர

ஆழுங்கால்படுகை - கால் ஆழ்ம் படுகை, மூழ்கி இருக்கை, ஆழ்ந்து கிடக்கை

ஆழமோழை - ஆழமாய் உள்ளே சுழித்துக் கொண்டு போகிற சுழியை உடைய கீழாறு

ஆழாத பார் - அழுந்தாத பூமி

ஆழாந்து - அறிவிழந்து, தரைப்பட்டு

ஆழி - சக்ராயுதம், மோதிரம், ஆழம், கடல் இடமுடைமை, காம்பீர்யம், வட்டமாயிருப்பது, ஆனையின் கைந்நுனி, குளிர்ச்சி, மிகுதி

ஆழிப்பிறப்பு - ஆழி-கடல், அதுபோல் அளவிடமுடியாத பலபிறப்பு.

ஆழியான் - விஷ்ணு, ஸ்ரீவைஷ்ணவர்கள்

ஆள்விடுதல் - தூது விடுதல்

ஆளத்தி - பாட்டுக்கு முன்பாக ஆலாபனம் பண்ணுகை

ஆளர் - அடிமை செய்பவர்

ஆளிட்டந்தி தொழிகை அந்தி தொழுகை-சந்தியா-வந்தனம். அதை ஒவ்வொருவனும் தனக்காகத் தானே செய்யவேண்டும்; பிறரையிட்டு பண்ணுவது ஆளிட்டந்தி தொழுதலாகும்.

ஆளிட்டு சேவிக்கை - பிறரைத் தனக்கு பதிலியாக வைத்துச் சேவிக்கை

ஆளிட்டு நலிகை - அம்பாலே நலிகை

ஆளானார்க்காளாம் - அடிமைப்பட்டார்க்கு அடிமையாகும்.

ஆளியக்கம் - ஆள்நடமாட்டம்

ஆளி - கம்பு

ஆளியைக்காண்பரி - யாளியைக் கண்ட குதிரை

ஆற்றப்படைத்தான் - கணக்கில்லாமல் பெற்றவன்

ஆற்றிலே கெடுத்துக் குளத்திலே தேடுதல் - போனதோர் இடமாய் தேடுவதோர் இடமாய் இருப்பதாகும்.

ஆறல் பீறல் - ஆறல்-சூடு ஆறினது, பீறல்-பிளந்தது உடைந்தது, பயனற்றது.

ஆறு - வழி, உபாயம், நதி

ஆறுகால் சிவிகை - சிவிகை-பல்லக்கு, ஆறுகால் கட்டில் ஆறுகால் பல்லாக்கு - என்று இப்போதும் அந்தந்த வஸ்து உண்டு. பல்லாக்குக்கு கால் அழுந்தப் பயமின்றி ஆதாரத்துக்கு இல்லை. பல்லக்குக்கு ஆறுகால் தேவையில்லை. நாலுகால் தான்.

ஆறுசடைக்கரந்தான் - கங்கையைச் சடையிலே மறைத்துக் கொண்ட சிவன்

ஆறுசமயங்கள் - சார்வாகம், பௌத்தம், க்ஷபணம், வைசேஷிகம், ஸாங்கியம், பாசுபதம் என்று புறமதங்கள் ஆறு.

ஆன்விடை - பசுஜாதியாய் அறிவற்ற ருஷபம்

ஆன்றல் - நிறைவு, அகலம்

ஆனதாகிறது - எதுவானாலும் சரி

ஆனமையால் - ஆகையால்

ஆன அடிமை - கூடுமான அடிமைகள்

ஆனமட்டும் - முடிந்த மட்டும்

ஆனாத செல்வம் - கெடாத செல்வம்

ஆனாராகிலுய் - நீ யாராயிருந்தாலும் இரு

ஆனாயன் - மாட்டிடையன்

ஆனின் மேய ஐந்து - பஞ்சகவ்யம். பசுவின் பால், தயிர், நெய், சாணம், நீர் - இவ்வைந்தையும் சாஸ்திரம் விதிக்கும் முறையில் கலக்கில் எடுத்து மந்திரம் சொல்லிக்கலந்து சிறிது சாப்பிடுவது ஆகும். தீமை முதலான தோஷங்கள் நீங்கும்.

ஆனைக்காலிட்டழிக்கை - பலாத்காரம் பண்ணுகை

ஆனைக்குதிரை வைக்கை ஆனைக்கு முன்னே குதிரையை ஓட விடுகை, அதாவது ஆனையினுடைய வேகத்தை பரீட்சை செய்வதற்காகக் குதிரையை முன்னடத்தி ஆனையைப் பின் நடத்துவர்கள்; ஆனையும் துதிக் கையாலே குதிரையைத் தொடும்படி கிட்டக் கிட்டச் சென்று பின்னையும் தொட முடியாமல் இருக்கும்.

ஆனைக்குப்பாடுவாரைப்போலே சதுரங்கம் ஆடுவாரைப் போல இருப்பது. அதாவது கவனிக்க வேண்டிய

இருக்கை — விஷயத்தை விட்டு வேறொன்றில் கவனம் உடையவனாயிருப்பதற்கு இவ்வாறு உவமை கூறப்படுகிறது.

ஆனைக்குப்பு - குப்பு குப்பாயுள்ள யானை குதிரை முதலிய காய்களுக்குப் பேராகும்.

ஆனைக்கூட்டத்துக்குக்கதவிடாமை — ஆனைகள் ஒன்றுக்கொன்று புணரும்போது கதவு சாத்தி மறைத்துக்கொள்வதில்லை.

ஆனைச்சாத்தன் - பாரத்வாஜபக்ஷி, குருவி போல் இருக்கும் பெரிய குருவி, வலியன்

ஆனைச்சொட்டை - சொட்டை-கத்தி, ஆனைமேல் வைத்துச் செல்லும் பெரிய கத்தி

ஆனைத்தாள் - ஆனைக்கால், பெருங்கால்

ஆனைத்தொழில் - செயற்கரிய செயல்கள்

ஆனைப்பண் - ஆனைக்கட்டு, சரவணை, கட்டு

ஆனையளறுபட்டாற்போலே - சேற்றிலே அகப்பட்டாற்போலே

ஆனைப்புல்லு - நெல்லுமணி

ஆனையில் கிடந்த கிடக்கை — ஆனைபோலே தன் அவயவங்களைப் பொகட்டு சுதந்தரமாய்க் கிடந்தாப்போலே இருந்த இருப்பு.

* ஆண்டாள் - ஸ்ரீரங்கத்தில் பெருமாளை எழுந்தருளப் பண்ணும் போது வஸ்திரங்களை ஒன்றொடன்று சேர்ப்பதற்காக உபயோகிக்கும் குண்டூசி உள்ளே குண்டூசி என்று சொன்னால் வெளியே கேட்பார்க்கு விபரீதமாய் படுமாகையால் அதற்கு இநத சமயத்தில் மட்டும் ஆண்டாள் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனராம்.



# தீர்த்த யாத்திரை

கோராகும்பர் என்ற மகான் ஒருவர் இருந்தார். அவரிடம் சிலர் அணுகி "நாங்கள் தீர்த்த யாத்திரை செல்வதாக இருக்கிறோம் தாங்களும் எங்களுடன் வாருங்கள்" என்றழைத்தனர்.

கோரா கும்பர் அந்த அன்பர்களிடம் ஒரு பாகற்காயைக் கொடுத்து "நீங்கள் மூழ்கும் புனிதத்தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் இந்தப்பாகற்காயை முக்கி எடுத்து வாருங்கள் அதை எனக்குக் கொடுங்கள் போதும்" என்று சொல்லி அனுப்பினார். அன்பர்கள் யாத்திரை முடிந்து திரும்பி வந்து கோராவிடம் பாகற்காயைத் தந்து "தாங்கள் கூறியபடியே இந்தப் பாகற்காயைப் பலபுனித தீர்த்தங்களில் முக்கி எடுத்துக்கொண்டு வந்திருக்கோம்" என்றனர்.

கோரா அந்தப் பாகற்காயை நறுக்கிச் சிறு சிறு துண்டுகளாக்கினார். அவற்றை அந்த அன்பர்களிடம் கொடுத்து உட்கொள்ளும்படி கூறினார்.

வந்தவர்கள் அந்தப் பாகற்காயை வாயிலிட்டு பாகற்காயின கசப்பைச் சகிக்கமுடியாமல் துப்பிவிட்டனர். அப்போது கோரா அந்த அன்பர்களிடம் இவ்வளவு புனித தீர்த்தங்களில் மூழ்கியும் பாகற்காய் தன் இயல்பான கசப்பை இழக்கவில்லை. அதுபோலவே நாமும் எவ்வளவு யாத்திரைகளை மேற்கொண்டாலும் இழிந்த குணங்களாகிய காமம், கோபம், பொறாமை முதலிய கசப்பை நீக்கிக் கொள்ளும் வரையில் மனம் தூய்மையடையாது. தூய்மையற்ற உள்ளத்தில் கடவுள் தரிசனம் ஏற்படாது. மனத்தூய்மைக்கு இறைவனிடம் ஆழ்ந்த ஈடுபாடும் சுயநலமற்ற பக்தியுமே சாதனங்கள் இவற்றைப் பயிலுங்கள்" என்று சொல்லி அனுப்பினார்.

--தேனி முருகேசன்.

நன்றி. ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்



திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்

## விண்ணப்பம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் 'ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்' ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அது அண்மையில் தேவஸ்தானத்தின் 1993ஆம் ஆண்டு வைரவிழா ஆண்டு ஒட்டி, பக்தர்களுக்காகத் தொடங்கி வைக்கப்பட்டுள்ளது. இந்தியக் கட்டிடக்கலை மற்றும் நவீன கட்டிடக் கலையைப் பின்பற்றி கட்டப்பட்ட மாபெரும் கட்டிடத்தில் இந்த மையம் தற்போது செயல்பட்டு வருகிறது. இந்து சமயத்தின், இந்திய மண்ணின் பெருமை பேசும் வேதங்கள், உபநிஷதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தத்துவங்கள், சாஸ்திரங்கள் மற்றும் பகவத்கீதை ஆகியவற்றின் சம்பந்தமான அரிய நூல்கள், ஆவணங்கள் இந்தக் கட்டிடத்தில் இடம்பெற்றுள்ளன. சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமை பேசும் இந்தியக் கலாசாரம், தத்துவங்கள், சமயப் பிரிவுகள், இசை போன்றவற்றின் சம்பந்தமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளவும், உரைக்கோவைகள், கருத்தரங்குகள் நடைபெறவும் இந்த மையம் செயல்படும். இந்து சமயம் சம்பந்தமான அரிய , இதுவரை வெளியிடப்படாத ஆராய்ச்சிக் கருத்துக்களும்; சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூல சமய நூல்கள், மொழிப்பெயர்ப்புகள் அடங்கிய நூல்களை வெளியிடுதலும் இந்த மையத்தின் பெரு முயற்சியாக அமையும். நவீன அச்சகம் ஒன்றினை நிறுவும் எண்ணமும் மேலாண்மையின் பரிசீலனையில் உள்ளது. எனவே, இந்தியக் கலாசாரக் கோயிலாகவும், தலைசிறந்த கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு ஒரு முன்னோடியாகவும் இந்த மையம் திகழ்ந்திடவே மேலாண்மை பெருமுயற்சி எடுத்து வருகிறது. இத்திட்டம் முழு அளவில் வெற்றிபெற, தகுந்த ஊக்கமும், ஆக்கமும், அடிப்படை தேவையாகிறது.

ஆகவே இந்த நூலகத்திற்குத் தாராளமான நன்கொடை அல்லது நூல்கள் வழங்கிடுமாறு பொதுமக்களையும், தனியார் அமைப்புக்கள் மற்றும் நிறுவனங்களையும் மேலாண்மை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறது. இந்த மையம் தன்னுடைய பொதுப்பணியில் மேலும் சிறந்தோங்கிட, தனிமனிதர்கள் அல்லது தனியார் அமைப்புக்கள் தங்களிடம் உள்ள இந்து சமய மற்றும் தத்துவங்கள் பற்றிய அரிய நூல்கள் அடங்கிய தனி நூலகங்களை இலவசமாக வழங்கிடவும் கேட்டுக்கொள்ளப்படுகிறூர்கள்.

எனவே தயைகூர்ந்து தாங்கள் அனுப்ப நினைக்கும் நூல்கள் அல்லது தொகையினை (வங்கி காசோலை மூலமாக) "சிறப்பு தனி அலுவர் (Officer on Special Duty), ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம், திருப்பதி-517502, ஆ. மா." எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பியே
நூலின்றிக் கோட்டி கொளல். --குறள்



# ஆர்ஜித சேவை விவரங்கள்

## (1) நாள் சேவைகள்

| சேவையின் பெயர் | கட்டணத் தொகை ரூ. | அனுமதிக்கப்படும் நபர்களின் எண்ணிக்கை | அனுமதி நேரம் காலை |
|---|---|---|---|
| 1) சுப்ரபாத தரிசனம் | 100-00 | 1 | 2-30 ,, |
| 2) தோமாலா | 200-00 | 1 | 3-30 ,, |
| 3) அர்ச்சனை | 200-00 | 1 | 4-30 ,, |
| 4) தோமாலா மற்றும் அர்ச்சனை (வெள்ளிக்கிழமைகளில்) | 400-00 | 1 | 6-30 ,, |
| 5) அமந்த்ரணோத்ஸவம் (வெள்ளிக்கிழமைகளில் நடைபெருதது | 600-00 | 1 | 3-30 ,, |
| வெள்ளிக்கிழமைகளில் நடைபெறுவது | 600-00 | 1 | 6-30 ,, |
| 6) நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைகளில்) | 100-00 | 1 | 5-30 ,, |
| 7) சிறப்பு நுழைவு தரிசனம் | 30-00 | 1 | ஸர்வ தரிசனம் அனுமதியின் போது |
| 8) ஏகாந்த சேவை | 100-00 | 1 | இரவு 10-30க்குப் பிறகு. |

**குறிப்பு :**

(1) எண் 1 முதல் 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பாகவே முன்பதிவு செய்துகொள்ளலாம்.

(2) ஏகாந்த சேவைக்கும், சிறப்பு நுழைவு தரிசனத்திற்கும் முன்பதிவு கிடையாது.

(3) ஸர்வ தரிசனத்திற்குப்பிறகு கிடைக்கும் நேரத்தைப் பொறுத்து, இரவு 10-30 மணிக்குப் பிறகு ஏகாந்த சேவைக்கான அனுமதிச் சீட்டுக்கள் விற்கப்படும்.

## (2) நாள் உத்ஸவங்கள்

### 1) கல்யாணோத்ஸவம் :

ரூ. 2500/- காலை 10-00 மணிக்கு: 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : மேல் துணி (உத்தரீயம்) மற்றும் ஒரு இரவிக்கைத் துண்டு, 15 பெரிய லட்டுகள், 15 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள, சரக்கரைப் பொஙகல், புளியோதரை, ததயோதனம (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு)

### 2) பிரத்யேக கல்யாணோத்ஸவம் :

ரூ. 750/- காலை 10-00 மணிக்கு: 5 நபர்கள அனுமதிக்கப்டுவர்.

**அன்பளிப்பு** : மேல் உத்தரீயம், ஒரு இரவிக்கைத துண்டு, ஒரு பெரிய லட்டு, ஒரு வடை.

### 3) ஆர்ஜித பிரம்மோத்ஸவம்

ரூ. 500/- (நாள் ஒன்றிறகு) மதியம் 1 மணிககு: 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அனுமதிக்கப்படும் வாகனங்கள் 1) பெரிய சேஷ வாகனம், 2) வெள்ளி சிறிய கருட வாகனம் 3) வெள்ளி அனுமார் வாகனம்.

### 4) தோலோத்ஸவம்/ஊஞ்சல் சேவை :

ரூ. 750/- மதியம் 1-30 மணிக்கு: 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயிலுக்குள் உள்ள கண்ணாடி அறையில் இச்சேவை நடைபெறும்.

**அன்பளிப்பு** : சேஷ வஸ்த்ரம்

### 5) வசந்தோத்ஸவம் :

ரூ. 3000/- (நாள் ஒன்றிற்கு) மதியம் 2-00 மணிக்கு: 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம், 6 வடைகள், 20 தோசைகள், தத்யோதனம், புளிஹோரை, பொங்கல், சர்க்கரைப் பொங்கல்.

### 6) ஸகஸ்ர தீபாலங்கார சேவை :

ரூ. 500/- மாலை 5-30 மணிக்கு கோயிலுக்கு வெளியே நடைபெறும் சேவைக்குப்பிறகு 5 நபர்கள் வைகுண்டம் 'வரிசை' கட்டிடம் வழியாகத் தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம்.

முற்கூறிய சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்து கொள்ளலாம்.)

## வாராந்திர சேவைகள் மற்றும் உத்ஸவங்கள்

### 1) விசேஷ பூஜை :

(திங்கட்கிழமைகளில்) ரூ. 3000/- காலை 6-00 மணிக்கு: 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம், 5 பெரிய லட்டுகள், 5 வடைகள்.

**2) அஷ்டதளபாத பத்மாராதனா சேவை :** (செவ்வாய்க்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 10-00 மணிக்கு: 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம், 10 பெரிய லட்டுகள், 10 வடைகள்.

**3) ஸகஸ்ர கலஸாபிஷேகம் :**
(புதன்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 5-30 மணிக்கு: 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம், 15 பெரிய லட்டுகள், 10 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள், தத்யோதனம், புளிஹோரை, பொங்கல், சர்க்கரைப்பொங்கல், பாயசம் (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு.

**4) திருப்பாவாடை :**
(வியாழக்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 5-30 மணிக்கு: 10 நபரகள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம்; 15 பெரிய லட்டுகள்; 15 வடைகள்; 15 அப்பங்கள்; 10 தோசைகள்; 10 ஜிலேபிகள்; 10 தேன் துளைகள்; புளியோதரை; பாயசம் (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு)

**5) அபிஷேகம் :**
(வெள்ளிக்கிழமைகளில்) காலை 3-30 மணிக்கு

**(அ) பூராபிஷேகம்**
ரூ. 750/- (நபர் ஒருவர்க்கு).

**அன்பளிப்பு:** இரண்டு சிறிய லட்டுகள், இரண்டு வடைகள்.

**(ஆ) புனுகுப் பாத்திரம்**
ரூ. 300/- (நபர் ஒருவர்க்கு).

**அன்பளிப்பு:** இரண்டு சிறிய லட்டுகள், ஒரு வடை.

(இ) கத்தூரிக் கிண்ணம்
ரூ 150/- (நபர் ஒருவர்க்கு).

**அன்பளிப்பு:** ஒரு சிறிய லட்டு, ஒரு வடை.

**குறிப்பு :**

1) 1 முதல் 4 வரை உள்ள எல்லா வாராந்திர சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்யலாம்.
2) டிக்கெட்டுகள் கிடைப்பதைப்பொறுத்து, ஒரு வருடத்திற்கு மேலாக அபிஷேகத்திற்காக முன்பதிவு செய்யப்படும்.

## வருடாந்திர உத்ஸவங்கள் மற்றும் சேவைகள்

**1) பவித்ரோத்ஸவம் :**
ரூ. 5000/-. மூன்று நாட்கள் நடைபெறும். பொதுவாக இந்த உத்ஸவம் ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்ட மாதத்தில் நடைபெறும். நிகழ்ச்சிகளுக்கு ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயில் அலுவலக வசதியைப் பொறுத்து, இரணடு நபர்கள் ஒரு நாளைக்கு தோமால சேவைக்கும் அர்ச்சனைக்கும் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : இரண்டாம் நாள்: 30 தோசைகள, பொங்கல். மூன்றும் நாள்: 30 தோசைகள், பொங்கல், நான்காம் நாள் 6 வடைகள் மற்றும் வஸ்த்ரம்.

**2) புஷ்ப யாகம் :**
ரூ. 3500/- (ஒருநாளைக்கு) காலை 6-00 மணிக்கு: பிரம்மோத்ஸவத்திற்குப் பிறகு ஸ்ரவண நட்சத்திர நாளன்று ஒரு நாளைக்கு இந்த உத்ஸவம் நடைபெறும்.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம், ஒரு தங்கக்காசு

**3) தெப்போத்ஸவம் :**
ரூ. 2500/- (நாள் ஒன்றிற்கு) மாலை 6-00 மணிக்கு வருடந்தோறும் பிப்ரவரி - மார்ச்சு மாதத்தின்போது ஐந்து நாட்களுக்கு இவ்விழா நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : மேல் உத்தரீயம் மற்றும் இரவிக்கைத்துண்டு.

**4) பத்மாவதி பரிணயம் :**
ரூ. 5000/- நபர் ஒருவர்க்கு: மாலை 3-00 மணிக்கு: ஆண்டுதோறும் மூன்று நாட்களுக்கு, பொதுவாக ஜூன் மாதத்தில் நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்த்ரம், இரவிக்கைத்துண்டு, ஐந்து லட்டுகள், ஐந்து வடைகள்.

**5) அபிதேயக அபிஷேகம் :**
ரூ. 2000/- (நபர் ஒருவர்க்கு) காலை 8-00 மணிக்கு: ஆண்டுதோறும் பொதுவாக ஜூன் மாதத்தில் மூன்று நாட்களுக்கு நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : மேல் உத்தரீயம், இரவிக்கைத் துண்டு, ஒரு லட்டு, ஒரு வடை.

**6) புஷ்ப பல்லக்கு :**
ரூ. 1000/- மாலை 5-30 மணிக்கு: ஆண்டுதோறும் ஜூலை மாதத்தில் ஆனிவார ஆஸ்த்தானத்தின் போது நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : மேல் உத்தரீயம், இரவிக்கைத் துண்டு, ஒரு லட்டு, ஒரு வடை.

**7) கோயிலாழ்வார் திருமஞ்சனம் :**

ரூ. 3000/-. காலை 11-00 மணிக்கு: ஆண்டுக்கு நான்கு முறைகள் வியாழக்கிழமைகளில் யுகாதி (தெலுங்கு வருடப்பிறப்பு) ஆனிவார ஆஸ்த் தானம், பிரம்மோத்ஸவம், வைகுண்ட ஏகாதசி ஆகிய முக்கிய நிகழ்ச்சிகளுக்கு முன்பு நடை பெறும். 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

***அன்பளிப்பு :*** வஸ்த்ரம், 15 லட்டுகள், 15 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள் மற்றும் அன்னபிரஸாதங்கள்.

***குறிப்பு :*** சேவை டிக்கெட்டுகள் கிடைப்பதைப் பொறுத்து இந்த வருடாந்திர சேவைகளுக்கு முன்பதிவு செய்யப்படும்.

## அன்ன பிரஸாதம்

நைவேத்தியத்திற்கான அன்னபிரஸாதங்களின் (கால் சோலா அளவு) கட்டணத்தொகை விவரங்கள் கீழ்வருமாறு:

| | | ரூ. |
|---|---|---|
| 1) | தத்யோதனம் | 100-00 |
| 2) | புளிஹோரை | 200-00 |
| 3) | பொங்கல் | 225-00 |
| 4) | சர்க்கரைப்பொங்கல் | 250-00 |
| 5) | ஸாகராபாத் | 250-00 |
| 6) | ஸீரா | 450-00 |
| 7) | ப்பாயஸம் | 225-00 |

## மற்றையத் திட்டங்கள்

**உதயாஸ்தமன ஸர்வ சேவா அறக்கொடைத் திட்டம் :**

வெள்ளிக்கிழமை தவிர்த்து எந்த நாளாயினும்: நன்கொடை: 1,00,000/-

எந்த வெள்ளிக்கிழமை நாளாயினும் 3,00,00/-

நன்கொடையாளர் மற்றும் அவரைச்சார்ந்தவர்கள் (மொத்தம் 6 நபர்கள்) சுப்ரபாதம் முதல் ஏகாந்த சேவை வரை உள்ள சேவைகளுக்குக் குறிப்பிட்ட நாளன்று அனுமதிக்கப்படுவர். மேலும் அன்று நடைபெறும் மற்றைய ஆர்ஜித சேவைகளையும் கண்டு களிக்கலாம்.

***அன்பளிப்பு :*** ஒவ்வொரு ஆண்டும் ஒரு கல்யாணோத்ஸவ பட்டுத்துணி, 25 லட்டுகள் 5 வடைகள்.

**பாலாஜி அர்ச்சனைத் திட்டம் :**

நன்கொடை ரூ.5588/- பத்தாண்டுகளுக்கு, வருடத்திற்கு ஒரு நாள், நன்கொடையாளரின் பெயரில் இறைவனுக்கு அர்ச்சனை நடைபெறும். அக்குறிப்பிட்ட நாளை நன்கொடையாளர் அறிவிக்க வேண்டும். எந்த ஆண்டாயினும் அந்நாள் (நன்கொடையாளர் விரும்பும் நாள்) வெள்ளிக்கிழமையாயிருப்பின் அடுத்த நாளுக்கு நன்கொடையாளர் அனுமதிக்கப்படுவர்.

***சலுகைகள் :***

1) அர்ச்சனை சேவை நாளன்று நன்கொடையாளர்க்கு இலவச இடவசதி அளிக்கப்படும்.

2) அர்ச்சனை சேவைக்கு இரண்டு நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

3) சுப்ரபாத சேவைக்கும், சிறப்பு நுழைவு தரிசனத்திற்கும், மூன்று நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

## பொதுத் தகவல்கள்

1) குறிப்பிட்ட சேவைக்கான தொகையினை "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி" (Executive Officer, T.T. Devasthanams, Tirupati.) எனும்பெயரில் கோடிட்ட வங்கி காசோலை எடுத்து, அதனை "பெயிஷ்கார், திருமலைக்கோயில், திருமலை-517504" என்ற முகவரிக்கு ஒரு விண்ணப்பத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் வேண்டும். இதனை தேவையான நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும். அந்தந்த சேவைகளுக்குத் தனித்தனியாக விண்ணப்பிக்க வேண்டும். தேவையான சேவைகள் கிடைப்பதைப் பொறுத்து முன்பதிவு செய்யப்பட்டு, உறுதிமடல்அனுப்பப்படும்.

2) தேவையான இடவசதிகளுக்காக, அதற்குரிய கட்டணத்தொகையானது, "செயலாட்சித்தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் பெயரில் கோடிட்ட வங்கி காசோலை மூலமாகப் பெறப்பட்டு அதனை நாள், நபர்கள் ஆகிய தகவல்களுடன் கூடிய விண்ணப்பக் கடிதத்துடன (ஆங்கிலத்தில்) இணைத்து, அவற்றை 30 நாட்களுக்கு முன்பாக (அப்போதுதான் முன்பதிவு உறுதிமடல் அனுப்ப ஏதுவாக அமையும்.) "Assistant Executive Officer, Reception I - T.T.D., Tirumala-517504" எனும முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

3) மேலும் தகவல்களுக்கு "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருபபதி-517501" அல்லது பெயிஷ்கார், திருமலைக்கோயில், திருமலை-517504 எனும் முகவரியுடன் ஆஙகிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

4) நன்கொடையாளர்கள், சேவை செய்பவரகள், உத்ஸவங்களில் பங்குபெறுவோர் யாவரும் திருமலை வைகுண்டம் 'க்யூ' கட்டிடம் வழியாக அனுமதிக்கப்படுவர்.

# செய்திச்சுருக்கம்

## தங்க மாலை

அண்மையில் சென்னையைச் சார்ந்த பெயர்கூற விரும்பாத பெண்மணி ஒருவர் திரு வேங்கடவனுக்காக ரூ. 4.5 இலட்சம் பெறுமான தங்க மாலை ஒன்றினைக் காணிக் கையாக வழங்கினார். இம் மாலை விரைவில் திருமலைக் கோயில் மூலவர்க்கு அணி விக்கப்படும் என்றுதி.தி.தேவஸ் தான பொறுப்பாண்மைக்குழுத தலைவர் திரு. ஏ. செங்கல் ரெட்டி அவர்கள் குறிப்பிட்டார்.

* * *

## திருமலையில் குடியரசுத் தலைவர்

அண்மையில் இந்தியக் குடி யரசுத்தலைவர் திரு. எஸ்.டி. சர்மா அவர்கள் தன் துணை வியார் திருமதி. விமலா சர்மா அவர்களுடன் திரும லைக்கு வருகை புரிந்தார். கோயிலுக்குச் செல்லுமுன், திரு சர்மா அவர்கள் கோயில் சார்பில் வேத கோஷங்கள் முழங்க மரியாதையை ஏற்றுக் கொண்டார். தரிசனத்திற்குப் பிறகு, திரு. சர்மா அவர்க ளுக்குக் கோயில் பிரஸாதமும், சேஷ வஸ்த்ரமும் வழங்கப்பட் டன. அடுத்தநாளன்று திரு. சர்மா அவர்கள் திருச்சானூ ருக்குச் சென்று ஸ்ரீபத்மாவதி தாயாரை வழிபட்டார்.

* * *

## பிரபந்த் திட்டத்துறை

திருமலை திருப்பதி தேவஸ் தானத்தாரின் திவ்ய பிரபந் தத திட்டததுறையின் சார்பில் ஆழ்வார்கள், ஆசார்ய பெரு மக்கள் ஆகியோரின் பாடல் கருத்துக்கள் வரலாற்றுச் செய் திகள் ஆகியவற்றின் பெருமை தமிழகத்தில பல்வேறு முக்கிய நகரங்களிலும், ஆழ் வார்கள், ஆசார்யர்கள் பிறந்த திருத்தலங்கள், திவ்ய தேசங் கள் போன்ற இடங்களிலும் பல்வேறு கலை நிகழ்ச்சிகள், உரைக்கோவைகள், சொற்பொழி வுகள் போன்றவற்றின் மூலம் நடைபெற்று வருகின்றன. இவ் வகையில் அவர்கள்தம் சிறப் பினை வடநாட்டிலும் பரப்பி டும் வகையில், ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி பிரம் மோத்ஸவம் முன்னிட்டு ரிஷிகே ஷிலும், புதுடில்லி ஆந்திர பவ னத்திலும் அண்மையில் ஆழ் வார் பாடல்கள் சம்பந்தமான இசை மற்றும் நாட்டிய நிகழச சிகள் நடைபெற்றன.

இந்நிகழ்ச்சிகளுக்காகத் திருப பதியிலுள்ள தி.தி. தேவஸ்தா னத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா இசை மற்றும் நாட்டியக் கல் லூரியைச் சார்ந்த கலைஞர்கள் பலர் ஆழ்வார் பாடல்களுக் கான இசை மற்றும் நாட்டிய நிகழ்ச்சிப் பயிற்சியினை சுமார ஆறுமாத காலமாக மேற் கொண்டனர். மேற்கூறிய கல் லூரியின் நாட்டியத்துறை விரி வுரையாளர் திரு. தேவேந்திர பிள்ளை அவர்களின் (பெண் வேடம் பூண்டு) பரத நாட் டிய நிகழ்ச்சி ரிஷிகேஷ் கங்கைக் கரையில் உள்ள திருவேணி படித்துறை அருகே நடைபெற் றது. இந்நிகழ்ச்சியில் திருமதி. பத்மாவதி (வாய்ப்பாட்டு) திரு. சந்திரமௌளி ரெட்டி (வீணை) திரு. லக்ஷ்மி நாராயண (மிருதங்கம்) திருமதி. உமா



மதுபாலா (நட்டுவாங்கம) ஆகி யோர் பஙகேற்றனர்.

பொய்கையாழ்வாரின் 'எழுவார் விடைகொள்வார்' எனும் பாசுரத்திற்கேற்ப (ராகம் ஸஹாரா: தாளம்: திரி புட) பல்வேறு முத்திரைகளைக கொண்ட நாட்டிய நிகழ்ச்சி ஒன்று பொதுமக்களை வெகு வாகக் கவர்ந்தது.

* * *

## திருமலைநம்பி அறக்குழு

சுமார் ஆயிரம் ஆண்டு களுக்கு முன்னர் திருமலைககோ யில் கைஙகர்யம் செய்துவநத திருமலைநம்பிகளின் நினைவை ஒட்டி "திருமலைநம்பி ஸ்ரீவேங் கடேஸ்வரா கைங்கர்யம் மற் றும் அறநிலையக்குழு" எனும் அமைப்பினை திருமலையில் 3-7-94 அன்று தி. தி. தேவஸ் தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. ஏ. செங்கல் ரெட்டி அவர்கள் திறந்து வைத்தார். இவ் அமைப் பின் நோக்கமாவது, நாட்டின்



திருமதி. புஷ்பா ஸ்ரீவத்ஸன் அவர்கள் எழுதிய 'சத்குரு ஸ்ரீதியாக பிரம்ம புஷ்பாஞ்சலி' எனும் ஆங்கில நூலினை அண்மையில் திருமலை இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. சங்கர்தயாள் சர்மா அவர்கள் வெளியிட்டபோது

பல பகுதிகளில் வாழ்ந்து வரும் திருமலைநம்பி அவர்களின் வம்சத்தாரை ஒருங்கிணைத்து, அவர்கள் மூலம் திருமலைக்கோயில் கைங்கர்ய பணிகளைத் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டும் என்பதே யாகும். திருமலைநம்பி வம்சத்தாரை ஒவ்வொரு ஆண்டும் திருமலையில் கௌரவிக்கும் பணியையும் இவ் அறக்குழு மேற்கொள்ளும். இவ்அமைப்பினைத் தொடங்கி வைக்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின் போது தமிழ்நாடு கோயில் அறக்குழு அமைப்பு உறுப்பினர் திரு. பராச-ரன், ஸ்ரீமான் அக்னி ஹோத்ரம் தாதாசார்யார், வடமொழி அறிஞர் ஸ்ரீமான் மாதவாசாரியார், திருவரங்கம் ஸ்ரீஆண்டவன் ஆஸ்ரமத்தைச் சார்ந்த ஸ்ரீகார்யம், திரு. எம். கிருஷ்ணசுவாமி, திரு. என். எஸ். சேஷாதரி (திருமலை நம்பி அறககுழுவிற்காகத் திருமலையில உளள தன பரம்பரை வீட்டைத் தன தாயாரின நினைவாக அளித்தவர்) ஆகியோர் திருமலைநமபிகளின் கைங்கர்ய சிறப்பினைப் பற்றி உரையாற்றினார்கள்.

* * *



## பதவி ஓய்வு

'ஸப்தகிரி' இதழின் ஆசிரியராக சுமார் 32 வருட காலமாக பணிபுரிந்த திரு. காட்றபாடி சுப்பாராவ் அவர்கள் 30-6-94 அன்று நம் ஆசிரியர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். 1963இல் தி.தி. தேவஸ்தான இதழின் ஆசிரியராக பணியில் சேர்நத திரு. சுப்பாராவ அவரகளின் பதவிக் காலத்தில, பல்வேறு காலககட்டஙகளில 'ஸபதகிரி' பத்திரிகையின் வளர்ச்சி பலவகையாகப் பரிணமித்தது. அளவில மட்டும் மாற்றமின்றி, 'ஸபதகிரி' தமிழ் உளளிட்ட ஐந்து மொழிகளில வெளியிடபபடும சிறபபினை பெறறது. ஸபதகிரி ஆசிரியராக மட்டுமினறி, தி.தி. தேவஸ் தானததாரின சுயய எழுததாளர நிதி உதவி திட்டததின கூட்டாளராகவும், தி.தி. தேவஸ்தான நூல வெளியீட்டுப பிரிவின அலுவலராகவும பணி புரிந்தார. அவரதம ஓயவுககாலம சிறப்புடனும், அமைதியுடனும, நலமுடனும அமைந்திட அவ் ஏழுமலையான் திருவருள் புரிய வேண்டுகிறோம்.

-மேலாண்மை.

* * *

'ஸப்தகிரி' பததிரிகையின் துணையாசிரியராக சுமார் 18 ஆண்டுகளாக பணி புரிந்து வரும் திரு. நா.சு. இராமமூர்த்தி அவர்கள் 1-7-94 முதற்கொண்டு 'ஸப்தகிரி'யின் பொறுப்பு ஆசிரியராக நியமிககப்பட்டுள்ளார்.



ஸ்ரீவைத்தியநாத சுவாமி கோயில் மடவார்விளாகம்
-- கமலா மாரியப்பன்

(3-ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஆழத்திற்கேற்றவாறு அரியவை கிடைப்பன போன்று, புரிந்துகொள்ளும் அளவு தீர்வுகள் தந்திடும் கருத்துக்கடல் கீதையாகும்.

தன்னம்பிக்கையின் சிறப்பினை, தன்னடகத்தின் மேன்மையினை, தொண்டின் உயர் வினை, பக்திக்குத் தேவையான சரணாகதி தத்துவத்தின் வலிமையினை எடுத்துக்காட்டிடும் வாழ்க்கை இலக்கண - இலக்கியமே, வாழ்வின் கேள்வி- பதிலே கிருஷ்ணாவதார நிகழ்ச்சிக ளாகும்.

சீர்மல்கும் வைகுந்தவாசன் சிறையில் பிறந்தான். அலங்காரநாயகன் ஆய்ச்சியர் குலத்தில் வளர்ந்தான். ஞானியர் போற்றும் பரமன் தீயோர் நடுவில் வாழ்ந்தான். தேர் ஆயிரம் உடையோன் தேர்ப்பாகனானான். விதியின் நாயகன் பழிக்கு ஆளானான். தேவர் தொழும் திருவடியான், யாகத்தில் பலர் திருவடி தொழுதான். ஞான குருவானவன் சிஷ்யனாகத் திகழ்ந்தான். இவை காட்டும் செய்திகள் என்ன என்பதைச் சிந்திக்க வேண்டும்.

சிறையில் பிறந்ததாலும், இடையர் குலத்தில் வளர்ந்ததாலும், மனிதனை இடத்தா லும், குலத்தாலும் எடைபோடக் கூடாது என்பது உணர்த்தப்பட்டது. தீயோர் பலர் இருந்தாலும், நல்லோர் ஒரு சிலராலும் சமுதாயம் உயர்ந்திட வழி உண்டு என்பது பெறப்பட்டது. சேவை மனப்பான்மையும், தியாக உணர்வும் வலியுறுத்தப்பட்டது. இறை வழிபாட்டைவிட இறையடியார்களின் நல்லுறவே நம்மை உயர்த்தும் என்னும் வைணவ நெறி போற்றப்பட்டது. ஆற்றல் பல பெற்றிருந்தாலும் வாழ்க்கையில் குரு - ஆசிரியர் துணை இன்றியமையாதது என்பது சுட்டிக்காட்டப்பட்டது.

நாட்டில் நிலவ வேண்டிய அமைதியினை, அரசியல் நாகரிகத்தினை கண்ணன் தன் தூது பணியின் மூலம் தெரிவித்தான். பதவி ஆசையும், பாச வெறியும் இறுதியில் அழிவுக்கே இட்டுச்செல்லும் என்பது எச்சரிக்கை செய்யப்பட்டது. பகட்டு வாழ்க்கையோ, விளம்பர வாழ்வோ, செல்வச்செருக்கோ ஒருவனை உயர்த்திடாது, உண்மையான அன்பு இருக்கும் இதயமே தெய்வம் வாழும் இடம் என்பது விதுரனிடம், குசேலரிடம் கண்ணன் கொண்ட உறவு மூலம் மெய்ப்பிக்கப்பட்டது. சுண்டு விரலால் மலையைத் தூக்கியவன் துளசி இலையால் தாழ்ந்து போனது பக்தியின் வலிமையைப் படம் பிடித்துக் காட்டும். மண்ணையும், வெண்ணையையும் தின்றதன் மூலம் துன்பமும், இன்பமும் வாழ்வின் இரு பக்கங்கள் என்பது சொல்லப்பட்டது. பரமாத்மா ஜீவாத்மா சங்கமமே பக்தியின் இறுதிக் கட்டம், முக்தியின் முதல் இலக்கணம் என்பது பிருந்தாவனத்து ராசக்கிரீடை கூறும் கருத்தாகும்.

தன் பிறப்பால், வளர்ப்பால், சிந்தனையால், சொல்லால், செயலால், உறவால், குமிழ் சிரிப்பால் தனிமனித மேம்பாட்டிற்கும், சமுதாய உயர்வுக்கும் வழிகாட்டிய கண்ணனின் திரு அவதாரம் என்றும், எங்கும், எப்பொழுதும் போற்றப்படுவதாகும். கண்ணனது வாழ்வே நமது வாழ்க்கை விளக்கமாகும்.



Published on behalf of TT Devasthanams by N.S. Ramamurthy, M.A., Editor-Incharge and
Printed at T.T.D. Press, by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

